உ

கடவுள் துணை.

# அகஸ்தியமகாமுனிவர்

அருளிச்செய்த

# செந்தூரம்-300.

இஃது

திருவாவடுதுறைச்

சண்முகதேசிகரால்

பரிசோதிக்கப்பட்டு,

டி. சாரதா புத்தகசாலை

த. துரைசாமி முதலியார்

அவர்களால்

சென்னை

புவனேஸ்வரி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1925.

இதன் விலை] [அணா 8.

நெ. 23, பாளையப்பன் தெருவு, சென்னை.

225

ACC.NO. 45386
R689

9171

உ

கடவுள் துணை.

அகஸ்தியமகாமுனிவர்

அருளிச்செய்த

# செந்தூரம்-௩௱.

இஃது

திருவாவடுதுறைச்

சண்முகதேசிகரால்

பரிசோதிக்கப்பட்டு,

டி. சாரதா புத்தகசாலை

த. துரைசாமி முதலியார்

அவர்களால்

சென்னை

புவனேஸ்வரி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1925.



# இந்திராணிக்கிருதமும்,

# சமய சஞ்சீவி லேகியமும்.

சூதக சம்பந்தமான வியாதிகளால் சரீரம் ஸ்தாலித்து, வீட்டு விலக்கம் சரியான காலத்தில் உண்டாகாமலும், கர்ப்பந்தரிக்காமலு மிருக்கும் ஸ்திரீகளுக்கு இது திவ்ய ஔஷதம்.

சூதகம் கிரமப்படி வெளிப்படவேண்டிய காலங்களில் ஆகாமல் முப்பது நாற்பது அறுபது நாட்களுக்கு ஓர் தடவையாதல், சூதக காலத்தில் ரத்தம்சிறிது கண்டு மறைதல் சிலருக்கு சிறுவயதிலேயே சூதகம் நின்று சரீரம் ஸ்தூலித்தல், சூதகத்தில் உண்டாகும் உதிரத்தின் நிறம் மாறி வருதல், ஆயாசம், தலைஇடி, தலைபாரம், மயக்கம், இடுப்புவிட்டுப்போதல், ஜீரணசக்தி மறைதல், துடை கணுக்கால் முதலிய இடங்களில் நோய், தீவிரமான ஸ்வாஸம், சூதககாலத்தில் பொறுக்கமுடியாத வயிற்றுவலியால் புழு துடிப்பதுபோல் துடித்தல் முதலியவைகளை இந்த ஔஷதம் பற்றறப்போக்கி, மறுதாரத்தில் மேலே கண்ட நோய்களெல்லாம்சூரியனைக்கண்ட பனிபோல் இல்லாமற் செய்துவிடும்.

சில ஸ்திரீகளுக்கு அடிக்கடி கர்ப அழிவு உண்டாதல், கர்ப்பந்தரித்ததுபோல் சூதகம் நின்று இரண்டு மூன்று மாதத்திற்குப் பின் உதிரக்கட்டுதல், சிலருக்கு ஓர் குழந்தை பிறந்த பின் சந்தானமே இல்லாமற் போய்விடுதல், கர்ப்பத்தைத் தாமே அழித்துக் கொள்வதால் பின்னர் சந்தானம் இல்லாமற்போய்விடுதல் முதலிய கெடுதிகள் உண்டாவதுண்டு. அத்தகைய ஸ்திரீகள் இந்த ஔஷதத்தை சேவிப்பார்களானால் அவர்களுடைய மனக்குறை நீங்கி, பத்துமாதம் நிறைந்தபின் அழகான குழந்தையைப் பெற்று சந்தோஷமடைவார்கள். தேகத்தில் ஓடிஓடி குத்துதல், கைகால் குத்தல், குடைச்சல், இடுப்புவிட்டுப்போதல், ஒரேபக்கத்தில் தலைவலி வாந்தி, விக்கல், வயிறுகழிதல், வயிற்றில் கட்டி திரளல், மேகவாய்வு, ஓடுவாய்வு, கர்ப்பவாய்வு, பக்கவாய்வு முதலிய எல்லா வாய்வுரோகங்களும் வரப்பிரசாதம் பெற்றது. இது புத்திரபாக்கியத்தைக் கொடுத்து உதவும் சிரேஷ்ட ஔஷதம், இம்மருந்தை பந்தயங்கட்டிப் பரீக்ஷிக்கலாம்.

கிருதமும், லேகியமும் அடங்கிய செட் 1-க்கு ரூபா 2—8—0

---

டி. சாரதா புத்தகசாலை,,

நெ. 23, பாளையப்பன் தெருவு, மின்ட்போஸ்டு, சென்னை.

கடவுள் துணை.

அகஸ்தியமுனிவரருளிச்செய்த

# செந்தூரம்

## முந்நூறு.



காலுந்தலையுங் கலந்துநடுவாகிநின்று
மேலுந்துரியம் விளங்குமே - காலாம்
வயித்தியமுந்நூறும் வழங்கவேசூத்திரம்
பயிற்றுங்கணேசனருட் பார்.

காப்பு.

பூதலத்தில் தென்பொதிகை தன்னில்வாழும்
பூரணமே யென்குருவே சிவமேஐயா
மாதவத்தால் அஷ்டசித்தி யெட்டும்பெற்ற
வரிசையிலே வயித்தியநூல் வகையாய்ச்சொல்வேன
போதகத்தின் முகத்தானைக் கடைக்கோட்டானை
புழுக்குழியில் விழுந்தானைப் புதல்வன்றன்னை
சாதகமாய் மனமடங்கி யறிவிற்கூடி
தற்பரனாய் நின்ற கணபதிகாப்பாமே. (க)

---

நூல்.

கணபதியின் பதத்தாலே கீழ்முக்கோணங்
கரையடங்காப் பிறப்பறுப்பான் கடவுளான
கணபதியைக் குண்டலியிற் கண்டுதேறி
கனலெழுந்து வாய்வுவந்த புரியஷ்டத்தால்
கணபதியே பிறப்பிறப்பு ஆண்பெண்ணாகிக்
கரைகொள்ளா நாதமொடு விந்துவாகி
கணபதியைப் பெற்றெடுத்த விந்துவாலே
கழலுகின்ற விருளுமியுங் காணுகாணே. (உ)

காணப்பா புரியஷ்ட மெட்டினேடு
கலந்துதப்பா பூரணந்தான் கண்டத்தோடே
தோணப்பா யிடகலைக்குச் சோடசமேபாயுஞ்
சுகமாகப் பின்கலைக்குப் பன்னிரண்டாம்
பேணப்பா இதில்விட்ட குறையினாலே
பெண்ணோடு புருஷனங்கே சேரும்போது
ஊணப்பா பிரனவங்கொண் டுயர்ந்தசென்மம்
உத்தமனே யிதிற்பிறந்த நோய்கள்தானே. (௩)

தானென்ற சபையெழுத் தொண்ணூற்றாறும்
தத்துவமா மிவர்களுக்குப் பஞ்சகர்த்தாள்
தானென்றே கொண்டலைக்குந் தசமாம்வாய்வு
சாதகமா யபானனுட தத்துவந்தான்
தானென்று நின்றவிடம் வாதபித்தஞ்
சார்ந்த சிலேற்பனத்தோடு மூன்றினாலே
தானென்ற வியாதியெல்லாம் வளருமப்பா
சடலமெல்லாம் நோயிட்ட கூடுதானே. (௪)

கூடுகட்டிக் குடியிருந்த குறும்பரேகேள்
கொள்ளையிட்டார் கற்பமெல்லாங் கூறுய்த்தின்ன
நாடுமப்போ தொன்றோடே யொன்றுவேறாய்
நடைகொடுக்க மாட்டாமல் கற்பந்தின்றால்
தேடுமப்போ சிவயோகஞ் செய்யவேணும்
தெளிவாக வாதசித்தி காணவேணும்
ஆடுமப்போ காயசித்தி பண்ணும்போது
அதற்குமுன்னே யமிருத்து தட்டுறேனே. (௫)

தட்டுறே னென்பதற்குக் கற்பங்கேளு
சாதகமாய் காந்தமது பலந்தானஞ்சு
தெட்டிறதோர் வெள்ளையது பலந்தானென்று
திரமாகக் காரமொடு பலந்தானென்று
ஒட்டிறதோர் சாரமது பலந்தானென்று
உத்தமனே தாளகந்தான் பலந்தானென்று
பட்டிடவே பூநீறு கழஞ்சியொன்று
பாங்கான வெண்கருவெள் ளெருக்கம்பால்வாரே. (௬)

வார்த்துவைக்கச் சலமாகும் சலத்தைவிட்டு
மாட்டுவாய் பதினொன்று மருந்துங்கூட்டி
சேர்த்துநீ யரைத்திடுவாய் ரெண்டுசாமந்
திரமாகப் பின்பதனை வில்லைசெய்து
போர்த்திடுவாய் வெய்யிலிலே உலர்ந்தபின்பு
புகழான மூசையிலே யிட்டுமூடி
காத்திடுவாய் மேலோடு கொண்டுமூடிக்
கைமுறையாய் சீலைமண் கணக்காய்சசெய்யே. (எ)

செய்யப்பா உலைமுகத்தில் துருத்திரெண்டு
திரமாக ஊதிவிடு அமுகுமட்டும்
பையப்பா வெடுத்ததனை யாறவைத்து
பாங்காகப் பின்பொருக்கா லமுகஊது
மெய்யப்பா பின்பதனைக் குகையில்வைத்து
விளங்கவே பின்பொருக்கால் நன்றாயூது
அய்யப்பா காந்தமது ராப்போல்நிற்கும்
ஆ ஆ ஆ காந்தமது அருமைதானே. (அ)

அருமையென்ற காந்தத்தைக் குகையில்வைத்து
அப்பனே மூன்றுதிரம் அமுகவூதிற்
பெருமையென்ற காந்தமது சத்தாய்ப்போகும்
பேசசுது சூதமொரு பலத்தைத்தாக்கி
கருமையென்ற காந்தமது சோதித்தேறக்
கருவளையில் வீரமுடன் சாரங்கூடி
யுருமையென்ற சாரமது பழச்சாற்றாலாட்டி
யுலர்த்துவாய்ப் பணம்போலே வில்லைசெய்தே. (கூ)

வில்லைசெய் மருந்தெல்லாம் சமனாய்க்கொண்டு
மீறியதோர் காந்தமது உருகும்போது
சொல்லுவேன் சத்துக்குச் சமனாய்த்தாக்கு
துடியாக வொவ்வொன்றாய் கொடுக்கவாங்கும்
அல்லவே சமனாகத் தாக்கிப்பின்பு
அப்பனே ஓடுகொண்டு மூடிக்கொண்டு
வல்லதொரு குகையமுக நன்றாயூதி
மகத்தான காந்தமது வங்கந்தானே.

தானென்ற காந்தமது ஈயமாகச்
 சாஸ்திர மெல்லாபடித்தா ருமையென்றே
நானென்ற ஆணுவத்தால் வெளியிற்போட்டேன்
 காட்டாதே கள்ளரென்ற பிள்ளைக்கெல்லாம்
வானென்ற ஈயத்தைப் பதனம்பண்ணு
 வண்மையாய் தேவியுட நாதங்கேளு
வேனென்ற அயப்பொடிதான் பலந்தானஞ்சு
 வெள்ளையொடு தாளகமுஞ் சூதங்கூட்டே. (௧௧)

கூட்டியே சாரமொடு காரந்தன்னைக்
 குறியாக வதக்கியொரு பலந்தான்பாரு
மூட்டுவாய் பூநீறு கழஞ்சியொன்று
 முந்தியதோர் வெண்கருவு நீராலாட்டி
மாட்டுவா யிருசாமம் அரைத்தபின்பு
 வளமாக வில்லைசெய்து வெயிலிற்போட்டு
நாட்டுவா யுலர்ந்தபின்பு மூசைக்குள்ளே
 நயமாக வைத்ததனைக் குகைவாய்மூடே. (௰௨)

மூடப்பா வோடுகொண்டு சீலைசெய்து
 முன்போலே யுருக்கியெடு வெண்கலமாய்நிற்குந்
தேடப்பா முன்போலே சோதித்தேறு
 செகமெல்லா மிரும்பினுட ஈயங்காணூர்
ஆடப்பா யிதனுட்டுச் சித்தராட்டு
 ஆ ஆ ஆ நாகமதில் கூடிற்முனல்
விடப்பா பிலத்துதடா பிறவியேது
 மிதமிஞ்சு மென்றுசித்தர் மறைத்திட்டாரே. (௰௩)

மறைத்திட்டார் அயத்தினொடு காந்தந்தன்னை
 மக்களே யயமிருத்துத் தட்டுமென்று
குறைத்திட்டா ரறுசுவையுங் கழற்றுமுன்பே
 கொள்வதற்கு முதல்கற்ப மென்றுகூறூர்
நிறைத்திட்டே னுலகமெல்லாம் சித்தாய்ப்போக
 நிலையான ஆறுவரையுறுதி சொன்னேன்
முறைத்திட்டந் தப்பாமல் கற்பமேறு
 முந்தவே யயக்காந்த மொழிந்திட்டேனே. (௰௪

மொழிந்ததொரு அயக்காந்தம் பலந்தானென்று
முத்தமிழ்தேர் புலத்தியனே வகையொன்றுக்குத்
தெளிந்ததொரு தங்கமது பலந்தான்ரெண்டு
சேரவே மூன்றுமொன்று யுருக்கியாட்டு
கொளுந்ததொரு கல்வத்தில் பொடியாய்ச்செய்து
கூட்டப்பா கண்டிடைக்குச் சவ்விரத்தை
வளிந்ததொரு ரசமதிலே பனியிற்போட்டு
மாட்டடா தங்கைவிடை சூதந்தானே. (யரு)

சூதமுறை வாலைதன்னை நாள்மூன்றிற்றான்
சுறுக்காக வித்தியமொரு சாமமாட்டி
நாதமுற முலைப்பாலி லாட்டுஆட்டு
ராப்பனியிற் போட்டுவிடு மூன்றுநாளாய்
வாதமுமோ வேதையிடும் வாதிக்கல்லோ
வயித்தியத்தில் வாலைரசமார்க்கஞ் சொன்னேன்
வேதையிதி லோடாது ஆசியாதே
வேதைக்குக் குருவேறே விளம்பக்கேளே. (யசு)

விளம்புவேன் வாலைரசங் கண்டிடைக்குரெட்டி
மீறியதோர் செந்தியிடு சிலைபத்தொன்று
வளம்பெறவே பொற்றலையின் சாற்றாலாட்டி
வாசமா யிரண்டுநா ளரைத்தபின்பு
உளம்பிலக்கக் குப்பியிலே யுலர்த்தியிட்டு
உத்தமனே வாலுகையில் தீயைமூட்டு
தளம்பெறவே மூன்றுநாள் முத்தீயிட்டு
தப்பாது தளமுறு செந்தூரமாமே. (யஎ)

செந்தூரஞ் செகப்பென்ன முருக்கம்பூவோ
தேகத்துக் கழிவேது வயிரவனைப்பூச்சி
செந்தூர மெடுத்தடக்கிச் சிவனைப்பூசி
தேவியொடு கணபதிக்குப் பூசைபண்ணி,
செந்தூரந் தின்பதற்குத் தீட்சைக்குள்ளே
செயமாகக் கிரகலெக்கினமுஞ் சொன்னேன்
செந்தூரங் குன்றியிடை மூதண்டத்தின்
திரமான லேகியத்திற் பொதிந்துதின்னே.

திண்ணவே லேகியந்தான் முன்பேசெய்வாய
 தீட்சையிரு நூற்றுள்ளே திடமாய்ச்சொன்னேன்
மண்ணவே லேகியத்தை யாருஞ்சொல்வார்
 வளமாகக் காசிடைலேகியத்திற் கொள்ளு
உண்ணவே மண்டலங்கொள் வயதுகண்டு
 உத்தமனே நோய்களென்ற தெல்லாம்போகும்
அன்னமொடு பால்சீனி பத்தியந்தான்
 அப்பனே மற்றொன்று மாகாவாறே. (௰௯)

ஆகாது யென்சொன்னே னேதேதென்று
 லயமிருத்துத் தட்டுதற்குப் பத்தியமேவேணும்
வாகான செந்தூரம் நோய்கொண்டோர்க்கு
 வளமான வனுபான மறிந்துகூட்டித்
தாகான மண்டலமே குன்றிவீதம்
 சாதித்தால் நோயெல்லாம் தவருண்டேபோம்
பாகான பத்தியங்கள் காக்கவேண்டாம்
 பத்தியமாம் புகையிலேயும் புளியுந்தானே. (உ௰)

தானென்ற ரெண்டும்விட்டு கொண்டாற்கேளு
 தவறாது சகலவியாதிகளுந் தீரும்
ஊனென்ற வுடம்பெடுத்தால் சாகாக்கல்வி
 உத்தமனே யிதுக்கல்லோ தளசெந்தூரம்
மானென்ற பெண்கள் வலைக்குள்ளே சிக்கி
 மாள்வதற்கோ செந்தூர வைப்பைச்சொன்னேன்
தானென்ற பேச்சம்போய் தன்னைக்காணுஞ்
 சாதகமாய் லட்சியத்தின் குறிப்பைப்பாரே. (உக)

பாரப்பா வாசியினல் போகமாகும்
 பரிவான தீட்சையினல் சித்தியாகும்
காரப்பா சாபமெல்லாம் நிவர்த்தியாகும்
 கற்பத்தில் முதல்கற்ப மயக்காந்தம்கொள்ளு
சேரப்பா சித்திபெற்ற தேதினலே
 செந்தூர மயத்தாலே தெளிந்துகாணும்
பேரப்பா கேட்டுடனே யெமதூதாக்கள்
 பேசாதே யோடுவர்காண் பின்பாராதே. (உஉ)

பாராதே சித்தாந்த மொன்றுமில்லை
  பஞ்சகர்த்தாள் சட்டமது வேருமட்டுஞ்
சேராதே யென்றுசொல்லும் வேதாந்தத்தை
  தெளிந்தறிய மாட்டார்கள் சைவமாடு
கூராதே பூரணமென்ற தெய்வக்
  கோவிலுக்குட் சுயம்புவஸ்து பாதாரத்தை
சேராதே யிருப்பதென்ன வென்றுசொல்லி
  செப்புகிறேன் சித்தாந்தந் தெளியாமாடே. (உ௩)

தெளிவான மனத்தோர்க்கு வாதஞ்சொன்னேன்
  திடமற்ற மூடருக்குத் திடமுஞ்சொன்னேன்
தெளிவான பேர்க்குவயித்தியமுஞ் சொன்னேன்
  செய்முறையிற் கற்பநெறி கூடவேண்டி
தெளிவான மானவர்க்கு ஞானஞ்சொன்னேன்
  சித்தியுடன் முத்திபெற யோகஞ்சொன்னேன்
தெளிவான மனதோர்க்கு மவுனஞ்சொன்னேன்
  தீட்சையொடு பூசைவிதி செப்பினேனே, (உ௪)

செப்பினேன் வாதத்தி லட்சம்காப்பு
  திரமான வயித்தியத்தில் ரெண்டுலட்சம்
செப்பினேன் வாதத்தி லாயிரந்தான்
  தெளிவாக விருகாண்டந் திரமாய்த்தேர்ந்து
செப்பினேன் சூத்திரந்தா னிருநூறப்பா
  தீட்சைவிதி யிருநூறுந் தெளிவாய்ச்சொன்னேன்
செப்பினேன் ஞானமா யுரந்தான்தேர்ந்து
  தெளிவாக ஒருநூற்றில் திறந்திட்டேனே. (உ௫)

திறந்திட்டேன் வயித்தியத்தில் குறுக்கிலட்சம்
  செப்பினே னதிற்பாதி யதனைத்தேர்ந்து
திறந்திட்டேன் வாதத்திற் சூஸ்திரம்போல்
  தெளிவாக வயித்தியத்தில் சூஸ்திரமேகட்டி
திறந்திட்டேனிவ்வண்ண முந்நூறுந்தான்
  சிறுபிள்ளைக் கானலும் வயித்தியந்தான்
திறந்திட்டேன்பூரணசூஸ் திரந்தானப்பா
  செய்யிவிருபத்தோ யிரத்து அறுநூறே. (உ௬)

நாறுன யிருபத்து ஒன்றுநூறு
ஞுகரவே அறுபத்து நாலுகாண்டம்
வீறுனயிதைக் குறுக்கிச் சூஸ்திரம்போலப்பா
வெட்டவெளி பூரணஞ் சூஸ்திரத்தைச்சொன்னேன்
கூறுன யிருநூற்றுக் குள்ளேகேளு
கொட்டினேன் சரிதையொடு கிரிகையோடும்
பேறுன யோகமொடு ஞானத்தோடும்
பிலத்த சுவாசந்தனிலே பேணிக்காணே. (உஎ)

காணப்பா விட்டகுறை மார்க்கத்தோர்க்கு
கைவிட்ட சூஸ்திரமாய் வெளியிறபோட்டேன்
தோணப்பா கற்பத்திற் பத்துநூறுங்
அடியாகக் குறிக்கியிதை நாறுய்ச்சொன்னேன்
பேணப்பா கற்பநூலிருநூறுஞ் சொன்னேன்
பிலத்ததொரு மாந்திரிகம் நூறுஞ்சொன்னேன்
பூணப்பா யந்திரதந்திரம யேந்திரசாலம்
பூட்டினே ஞயிரந்தான் புகழ்ந்துபாரே. (உஅ)

பாரப்பா அடிகொடுத்து கற்பங்கொண்டு
பரிவாக உண்டுவருங் காலந்தன்னில்
சாரப்பா நாதமொடு பித்தத்தாலே
தனித்தசிலேற் பனத்தாலே தாறுமாறும்
சூரப்பா பாராமல் கற்பங்கொண்டு
சுழன்றுநீ யலையாதே நோய்கள்வரும்நேரம்
காரப்பா செந்தூர மினங்கள்தோறுங்
கட்டாய்ச் செந்தூரித்துக் கடக்கவையே. (உகூ)

வையப்பா கற்பங்கள் கொள்ளுமுன்பே
வகையான லேகியங்கள் சூரணங்கள்
செய்யப்பா கிருதமொடு தயிலமோடு
செய்துகொண்டு திஷ்டியப்பா கருமத்தோடு
பொய்யப்பா வுரைப்பதென்ன புத்திசொன்னேன்
புலஸ்தியனே யிதுக்குரைத்த வயித்தியந்தான்
மெய்யப்பா வெலன்றோர்க்கு மெய்யேயாகும்
விழலென்றாற் பொய்யாகும் விளம்பக்கேளே. (௩௰)

## கற்பூரசலாசத்து.

கேளப்பா கற்பூர சலாசத்துத்தான்
கெடியாகப் பலமொன்று பொரிகாரந்தான்
நாளப்பா பலமொன்று ரெண்டுங்கூட்டி
நலமான பருத்திநீறு அத்திவேர்த்தோல்
நீளப்பா பாங்காகக் கிஷாயம்செய்து
நிசமாக விட்டாட்டு ஒருநாள்மட்டு
மாளப்பா அஞ்செருவிற் புடத்தைப்போடு
ஆறியெடு கல்வத்தி லாட்டத்தானே. (கக)

ஆட்டத்தூ ளாகுமடா வெண்கருவைவிட்டு
அரைத்துவில்லை செய்ரவியி லுளர்த்திக்கொண்டு
மாட்டவே அஞ்செருவிற் புடத்தைப்போட்டு
வாகாக அரைத்து அஞ்சுதிரமுமானல்
நாட்டவே வெண்பொடியாம் பதனம்பண்ணு
நலமான பெருவயிறு மகோதரங்கள்
ஊட்டவேநீர் செரிப்புக் கல்லடைப்பு
ஓடுமெப்பா வெடியுப்புச் சுன்னநீரே. (கஉ)

வெடியுப்புப் பலம்பத்துப் பூநீறுபத்து
வேகமடா பழச்சாற்றிற் சாமமாட்டி
அடியிருப்புக் கறண்டியிலே வழித்துவைத்து
அப்பனே கொதிக்கவைக்கத் திண்ணமாகும்
கொடியதப்பா பீங்கானில் தீரதாகும்
கூறினேன் வயித்தியத்தி லுப்புநீரே
துடியப்பா சலாசத்துத் தனக்குமுன்னே
தோயப்பா அதைத்தன்னைப் புடத்திற்போடே. (கங)

போடப்பா வதுவல்லோ வறுத்துவாங்கும்
பொறிவந்து கற்பங்கள் கொள்ளும்போது
நாடப்பா தசவாய்வு பேதங்கொண்டு
நச்சாம்பல் கொடியுதிரம் பெருத்துக்காணுங்
கூடப்பா விதுக்கல்லோ காரச்சுன்னங்
கொட்டினேன் சத்தோடே கூட்டிக்கொண்டு
சாடப்பா உன்கையிலே சத்துக்காரந்
தடையறவே புலிபோலே தாக்கும்பாரே. (கச)

## அப்பிரசத்து.

தாக்கிடவே அப்பிரகச் சத்துசொல்வேன்
சாதிப்பே னப்பிரகம் நவநீதந்தான்
வாக்கிடவே பலமொன்று வெடியுப்போடு
வளமான வெண்காரஞ் சாரம்வெள்ளை
தாக்கிடவே தாளகமுங் கெவுரிசூதஞ்
சங்குமுடி தாரமுறு தாரசிங்கு
தேங்கிடவே பூநாக முலர்ந்ததப்பா
சேர்த்திடுவாய் வகைக்குமொரு கழஞ்சிதானே. (கரு)

கழஞ்சியடா பூநீறு பதினென்றாகக்
கட்டுமடா நவநீதத்தோடுங் கூட்டி
வழஞ்சியரை கலவத்தில் வெண்கருநீராலே
மாட்டிடுவா யிருசாமம் வில்லைசெய்து
குழஞ்சுவிட வச்சிரகுகைக் குள்ளேவைத்துக்
கூறுகச் சில்லிட்டுச் சீலைசெய்து
தழஞ்சுதடா அஞ்சுதிர மிளகப்பாரு
தாக்குலையி லூதிடவே சத்துமாமே. (கசா)

சத்தடா சோதித்தால் மணியாந்தன்னைச்
சதிராகச் சோதிக்க மருந்துகொண்டு
ஒத்தாஞ்சத் திடைக்குச் சோதித்தேபாரு
உத்தமனே சரிகைவெள்ளி போலேசயம்
பெத்துதடா சூதத்தைப் பதைக்கையிலேகொல்லும்
பெரியோர்கள் நவநீத சத்துவிள்ளார
சித்திவருங் கற்பத்துக் குறுதிமெத்த
சேரப்பா புடத்தங்கஞ் செலுத்தியாட்டே. (கஎ)

ஆட்டிடுவா யப்பிரக சத்துத்தானே
அப்பனே பலமொன்று உருகும்போது
மூட்டிடுவாய்த் தங்கமொரு பலந்தானப்பா
மூசையிலே ரெண்டுமொன்ற யுருக்கிவாங்கி
போட்டிடுவாய்க் கலவத்திற் பொடிக்கத்தூளாம்
புகழாகக் கண்டிடைக்கு வீரம்போடு
காட்டிடுவாய்த் தங்கவிடை சூதம்வாரு
கைமுறையாய் முலைப்பாலி லரைத்துப்போட்டே. (கஅ)

போடப்பா நாளொன்றுக் கொருசாமந்தான்
புகழாக மூன்றுநாள் பனியிற்போடு
ஆடப்பா சுருளட்டை போலேகூத
மாகுமடா செந்தகந்தான் ரெட்டிப்பிட்டு
தேடப்பா பத்திலொன்று சிலையுமிட்டு
தீர்க்கமாய்ப் பொற்றலையின் சாற்ருலாட்டி
சூடப்பா ரெண்டாநா ளரைத்தபின்பு
சுகமாகப் பொடிசெய்து குப்பிக்கேற்றே. (ஙகூ)

ஏற்றியே வாலுகையி லெரிப்பாயப்பா
என்சொல்வேன் மூன்றுநாள் சென்றபின்பு
ஆத்தியே குப்பிக்குள் சலாகையிட்டு
அடியிலே கிண்டிப்பா ரகாரத்தாலே
வாத்தியே செந்தூரம் பவளவர்ணம்
வாச்சுதடா காயசித்தி வசமாய்ப்போச்சு
தேற்றியே விடுவனென்று தேகந்தன்னைச்
சித்திபண்ணு முத்திபண்ணுந் திறத்தைக்காணேன். (சம)

திறமான அப்பிரக செந்தூரந்தான்
செய்வதென்ன உறுதியென்ருல் கற்பத்தாலே
நிறம்பெற்ற தோஷங்கள் சயங்கள்மேகம்
நிலைகெட்ட கண்மயக்கம் மையல்தாகங்
குறமான குட்டங்கள் சாத்தியமாம்ரோகம்
குன்மங்கள் மூகரோகம் மூலரோகம்
மறவான பித்தஞ் சிலேஷ்பனத்தால்
அளவற்ற நோயெல்லா மகன்றுபோமே. (சக)

அகன்றுபோ மப்பிரகசத் தென்றுசொன்னல்
அப்பனே கற்பத்தை யுறுதிபண்ணு
விகண்டமே வாராது விஷமெல்லாம்போம்
வேணபடி கற்பத்தைத் தின்னுதின்னு
அகண்டமெல்லாம் நீயாச்சு மலைக்கவேண்டாம்
அப்பனே வழலைதள்ளிக் கடுக்காய்கொண்டு
இகம்பெறவே மூலிகற்பங் கொள்ளும்போது
இனியில்லா நோய்களெல்லா மெதிர்க்கும்பாரே. (சஉ)

எதுத்துவரும் நோய்களெல்லாம் துரத்திவேட்டு
மிகத்தைவிட்டுப் பாத்துக்குள் ளாகபண்ணும்
மதிக்கவருங் கற்பமெல்லாம் வளமாயேற்று
மனம்வினைவை யறிவோடே வளர்ந்தேயேறுந்
துதிப்பதற்கு நாதவொலி காதிற்கேட்குஞ்
சொற்பெரிய குண்டலிக் குணந்திமீளுங்
கதிர்க்குளித்து அப்பிரக சத்துத்தங்கங்
கண்டாயோ செந்தூர மாகையாலே. (சங)

நிமிளை.

ஆகாகா நிமிளைசத்தைக் கேளுகேளு
அப்பனே பொன்னிமிளை பலந்தானென்று
பாகான ரோமமது பலந்தானென்று
பழச்சாற்றி லூறவைத்து மூன்றுநாள்தான்
வாகாகக் கழுவியதின் மேலேசுத்தி
மைந்தனே அரிதாரம் வங்கம்ரெண்டு
சாகவே பொன்னிமிளை மேற்பொதிந்துபின்பு
சாத்தடா ரோமத்தைச் சார்ந்துகேளே. (சச)

கேளப்பா குகைக்குள்ளே அரைப்பலம்பூநாகங்
கெடியாக வைத்ததின்மேல் மயூரத்தினிற்கும்
வேளப்பா அரைபபலந்தான் பாத்திவைத்து
வெண்காரம் அதின்மேல் கால்பலந்தான்வைத்து
வாளப்பா பொன்னிமிளைக் கலசம்வைத்து
மாட்டடா வதின்மேல்கால் பலந்தான்காரம்
நாளப்பா வதின்மேல் அரைப்பலமயூரம்
நன்றாக வதின்மேலே யரைத்திடுபூநீறே. (சரு)

பூநீறு கழஞ்சியொன்று மேலேதூவிப்
பூநாக மரைப்பலந்தான் அதின்மேல்வைத்து
வேணுகக் குகைவாயி லோடுமூடி
விரியாமல் மண்சீலை யஞ்சுசெய்து
தானுக வுலையில்வைத்து ஊதுஊது
சாந்தமாம் பொன்னிமிளைச் சத்துமாகும்
வானவர்கள் போற்றுமிந்த நிமிளைசத்து
வளமான வெண்கலம்போல் தகரும்பாரே. (சசு)

பாரப்பா மிமிளைசத்து சோதித்தேபின்
பரிவான பொன்னிறமா யீயமாகும்
ஆரப்பா மிமிளைசத்து ஆருஞ்சொல்லார்
அப்பனே வயித்தியத்துக் குறுதியாகுஞ்
சேரப்பா கற்பத்தால் வந்ததோஷம்
தீருமடா நோய்களெல்லாம் படிதானென்றால்
மேரப்பா பருப்பதம்போற் பஞ்சுவைத்து
மிளகதுபோற் றீயைவைத்த கதைபோலாமே. (சஎ)

### மிமிளைச்செந்தூரம்.

போமென்ற மிமிளைசத்துப் பலந்தானொன்று
பூட்டடா மூசையிலே யுருகும்போது
ஆமென்ற கருநாகம் பலந்தானொன்று
அப்பனே தங்கமது பலந்தானொன்று
சாமென்றேன் தங்கமொடு வங்கம்ரெண்டு
சாதகமாய்க் கலவத்திற் பொடிக்கத்தூளாம்
வேமென்றேன் வீரமது பலந்தானாலு
மேலான முலைப்பாலே விட்டுஆட்டே. (சஅ)

ஆட்டையிலே கோழிமலம் வெள்ளைகேளு
அப்பனே கால்பலந்தான் கூடப்போட்டு
மூட்டையிலே வாலைரசம் சவ்வுப்போலாம்
முறையான சூதம்ரெண்டு பலமேவாறு
மாட்டையிலே மூன்றுநாள் பனியிற்போடு
மறுபடியுங் கெந்தகந்தான் பலமீராறு
கூட்டையிலே பொற்றலையின் சாற்றாலாட்டிக்
கொடியசிலைக் காற்பலமுங் கூடப்போடே. (சகூ)

போட்டிடுவாய் வில்லைசெய்து ரவியிற்றானே
பொடிசெய்வாய் பின்பெடுத்துக் குப்பிக்கேற்றி
நாட்டிடுவாய் வாலுகையில் மூன்றுநாள்தான்
நலமாக முத்தீயும் நன்றாயிட்டு
மூட்டிடுவாய் சலாகைகொண்டு சோதித்துப்பார்
முனையிலே காகாக்கும் பதந்தானப்பா
கூட்டிடுவாய் குப்பிதனை யுடைத்துவாங்கு
குய்யசிவப் புறுமிமிளை சுறுக்குத்தானே. (ருய)

சுறுக்கான செந்தூரம் நிமிளையாச்சு
சொல்லக்கேள் ஒருபோது குன்றியுண்ணக்
கறுப்பான ஆவின்பால் தன்னிற்கொள்ளக்
கண்விழித்து மூடுமுன்னே பிணமும்பேசும்
வெறுத்தான சடலத்தைக் காலனப்பா
மெய்யுளைச்சல் பொறுத்துளைச்சல் சதைக்குள்தோஷம்
முறுக்கான விஷக்கடிகள் விடத்திற்குஷ்டம்
முகவாத மேகமென்ற தெல்லாம்போமே. (ருக)

போமடா வாதத்தில் வந்ததோஷம்
போகுமடா பித்தத்தால் வந்ததோஷம்
மாமடா சிலேஷ்டபனத்தால் வந்ததோஷம்
மல்லாந்தான் நிமிளைசத்தைக் கண்டபோதே
நாமடா உனக்கெதிரோ வென்றுநோய்கள்
நாட்டிலே யெவரிடத்துஞ் சேரப்போனல்
காமடா நிமிளையங்கே கண்ணுற்பார்த்தால்
கட்டோடே கடல்புக்குங் கதியில்லாதே. (ருஉ)

இல்லாதே யிருந்துகொண்டு கற்பங்கொண்டா
லிலட்சியத்தி லறிவோடே வாசிபார்த்து
வல்லமையாய் சாதிக்கும் யோகசித்தி
வள்மான குளிகைமுதல் மந்திரதீட்சை
நல்லதொரு பூசைவிதி யமுர்தலேகியம்
நலமான வாதமொடு பிலக்கக்கண்டு
செல்லுவாய் பின்பங்கே சித்தரோடே
சேரலாங் கைகொள்வார் திறத்தைப்பாரே. (ருங)

திறமான வயித்தியத்தைச் சொன்னேனப்பா
திறங்கெட்ட லோகர்க்கோ செப்பினேன்கே
ளுறுவாத ரசவாதத்துள் ளழுந்திப்பின்னே
உத்தமனே யினசாரி சரக்குச்சேர்த்தால்
நிறுவிக்கும் வயித்தியந்தான் வாதிக்காகும்
நேரான காலசித்தி நிசமதாகும்
விருதடா பேசியேலோகத் தோர்கள்
வேரோடே வயித்தியமெல்லாம் வருமென்பாரே. (ருச)

தாளக நீறு.

பாரப்பா புலத்தியனே அய்யாகேளு
 பாங்கான தாளகத்தி னீறுசொல்வேன்
சேரப்பா தாளகந்தான் பலந்தானென்று
 திறமான கல்சுன்னத் துள்ளேவைத்து
சாரப்பா அமரிபடி விட்டுநீற்றுத்
 தாளகந்தான் சுத்தியதா மிரண்டுபேத்தில்
வேரப்பா பழச்சாறு படிதானூட்டு
 வெள்ளச்சி முலைப்பால்தான் படிகாலூட்டே. (௰௫)

ஊட்டியபின் அரிதாரம் பேராமுட்டிச்சா
 றூத்தியே யரைத்திடுவா யிரண்டுசாமம்
ஆட்டியபின் வில்லைசெய்து ரவியிற்போடு
 அப்பனே மூன்றுநாள் காய்ந்தபின்பு
கூட்டியதோர் செருப்புக்கால் படியின்சாறு
 கொட்டுவாய் குகைக்குள்ளே புரசஞ்சாம்பல்
நாட்டியே மேல்மூடிச் சீலைசெய்து
 நயமாக விரண்டெருவிற் புடத்தைபோடே. (௰௬)

சூதபற்பம்.

புடம்போடத் தாளகந்தான் வெளுத்துநீறும்
 பேசாதே தாளகத்தின் வெள்ளைதன்னைத்
திடம்பெறவே சிமிழுக்குள் பதனம்பண்ணு
 செப்பக்கேள் சூதபற்பந் திறமாய்ச்சொல்வேன்
அடம்பிலையும் கடம்பிலையும் சிறுபுட்காலு
 அப்பனே வகைக்கு மொருபடிச்சாறுக்குள்
விடமதிட்டு வார்த்ததிலே கரந்தைச்சாறு
 விளங்கவே படியொன்று அதிலுள்வாரே. (௰௭)

வார்த்திடுவாய் முன்செய்யும் வரிசைகேளு
 வாகான காட்டுள்ளிக் கிழங்குச்சாறு
சேர்த்திடுவாய் கார்த்திகையின் கிழங்குச்சாறு
 சேரவே பண்ணுங்கோல் மூலிச்சாறு
ஏர்த்திடுவாய் வகைக்குமொரு படிசாறாக
 எடுத்தல்லோ சூதமொரு பலத்துக்குத்தான்

பார்த்திடுவாய் காந்தசத்தின் கிண்ணத்துள்ளே
பதையாமற் சாகுமடா சுறுக்குத்தாக்கே. (ருஅ)

சுறுக்கிட்ட பின்பெடுத்துச் சூதந்தன்னைத்
தூடியாக கலவத்தி லிட்டுக்கொண்டு
வெறுத்திட்ட முன்சாற்று லரைப்பாயப்பா
மெழுகுபோ லாகிவரும் வில்லைசெய்வாய்
உருகிட்டரவியிலே காயப்போடு
உத்தமனே குகைக்குள்ளே வைத்துமூடி
வெறுக்கிட்ட சீலைசெய்து புடத்தைப்போடு
வெளியிலே பரைபூசை விளம்பச்செய்யே. (ருசு)

செய்யவே தேவியங்கே வார்த்தைசொல்வாள்
திடமான சூதபற்பம் வாச்சுதென்பான்
பையவே அஞ்செருவிற் புடத்தைப்போடு
பாங்காக ரசவெள்ளை ரசகற்பூரம்
மெய்யப்பா கற்பத்தால் கூட்டமீறில்
விஷநீரால் குறைநோவு கண்டுதானல்
மையவே சூதபற்பங் குன்றிதானும்
மகத்தான தாளகத்தின் பற்பங்கூட்டே. (சுய)

கூட்டிடுவாய் குன்றியிடை யிரண்டுங்கூட்டிக்
கொள்ளுவாய் நாருண்டின் வேப்பம்பட்டை
நீட்டுவாய் பலமநூறு வெள்ளாட்டெச்சம்
நிசமாக அஞ்சுபத்து பலமேசேர்த்துக்
காட்டுவாய்ப் பூத்தயிலம் வடித்துவாங்கி
கருவான வீழிவேர்ச் சூரணமேசெய்து
மாட்டுவாய் செருப்புக் கால்தனிசாற்றுக
வாங்குவாய் படிநாலு மதனில்வாரே. (சுக)

வாரப்பா பனைவெல்லம் பலந்தான்பத்து
மருவியே கரைத்திடுவா யடுப்பிலேற்றிச்
சேரப்பா கமலத்தீயாக மூட்டு
செப்பினதோர் வேம்பினுட தயிலந்தன்னைக்
கோரப்பா படியொன்று கூடவிட்டு

கொட்டவே வீழிசூரணத்தி னேடு
சாரப்பா படியரைதான் புங்கம்பூவுந்
தனிச்சூரணத்தோ டரைப்படிதான் போடே. (சுஉ)

போடப்பா மிளகுசுக்கு ஓமங்காயம்
புத்தோடு தொட்டியொடு கிரும்புயேலம்
ஆடக்கேள் சீரகமு மதுரமோடு
அப்பனே வகையொன்று கழஞ்சியொன்று
நாடக்கேள் கார்கோலரிசி பலம்நாலு
நாட்டடா பறங்கியுட பட்டைபலம்நாலுஞ்
சூடக்கே ளிளவறுப்பாய் சூரணமேசெய்து
சூரணமெல்லா மொன்ருய் சூட்டிவையே. (சுங)

வைத்தபின்பு காரெள்ளுப் பலந்தானஞ்சு
மருவியிடி செங்கொட்டைப் பலமிரண்டு
நைத்தபின்பு சூரணத்தைப் பிசைஞ்சுகொண்டு
நலமான பாகுசெய்து வருமந்நேரம்
பொய்த்ததல்ல சூரணத்தை யதிலேபோட்டு
பூணவே தேனுமொரு படிதான்வாரு
மெய்த்திடவே ஆவினெய் படிதான்வாரு
மெழுகுபதம் ஆம்போதே வழித்துவாங்கே. (சுச)

வழித்துவைத்து பீங்காணுக் குள்ளேநீதான்
வாகாகத் தினமொன்றுக் கிருநேரந்தான்
கழிப்பாக லேகியத்தைக் கழஞ்சிவீதம்
கர்த்தாவை மனதுக்குள் தியானம்பண்ணி
யொழிந்திடவே முன்சொன்ன பற்பங்கூட்டி
உண்ணவே மண்டலந்தான் புளியாகாது
தழிப்பான புகையிலையும் வழுதலங்காய்விட்டு
தகையாகப் பாலுப்பைச் சத்தைக்கூட்டே (சுரு)

கூட்டவே பதினெட்டு குஷ்டமெல்லாங்
குடிப்போகு மென்றுசொல்லிச் சட்டைதள்ளுந்
தாட்டோடு சாராது பத்தியந்தான் தப்பில்
சண்ணுமடா தாளகமு சூதப்பற்பம்

வீட்டோடே யிருந்துபின்பு பத்தியங்காத்தல்
வெகுசுறுக்காய் கேட்குமடா சூதபற்பம்
பாட்டோடு துன்பம்விட்டு துயரநீங்கிப்
பரிசினத்தின் வேதையைப்போல் தேகமாமே. (௬௬)

அண்டச்சத்து.

ஆமப்பா அண்டோடு பலந்தானென்று
அப்பனே சூதமொடு காரசாரந்
தாமப்பா கெவுரிவெள்ளை யரிதாரந்தான்
சாதகமாய் மிறுதார சிங்கியோடு
போமப்பா வகையொன்று கழஞ்சிரெண்டு
புதிதான கலவத்தி லரைக்கக்கேளு
நாமப்பா வெண்கருநீர் விட்டுஆட்டி
நலமாகச் சாமம்ரெண்டு வில்லைகட்டே. (௬௭)

கட்டியபின் ரவியிலே மூன்றுநாள்தான்
காய்ந்தபின்பு குகைக்குள்ளே வைத்துமூடி
ஒட்டியபின் சீலைசெய்து உலையிலூது
உத்தமனே வொருமணியாய் நிற்கும்பாரு
வெட்டிணியா மண்டோடு வெண்கலம்போலாகும்
விள்ளார்க ளுபசரித்துக் காதியப்பா
அட்டியில்லை யண்டசத்தைச் சோதித்தேதான்
அப்பனே ஈயந்தான் பலந்தான்தூக்கே (௬௮)

தூக்கப்பா சமனாகத் தங்கந்தன்னைத்
துடியாக விரண்டுமொன்று யுருகும்போது
தாக்கப்பா சூதமொரு பலத்தைவாரு
தப்பளையைச் சற்பமது விழுங்கும்வாறும்
போக்கப்பா நாகமொரு பலத்தைப்போடு
போட்டபின்பு வீரமொரு பலந்தான்போடு
வாக்கப்பா லிங்கமொரு பலந்தான்போடு
மருவிநின்று உருகுமடா களங்கமாச்சே. (௬௯)

ஆச்சப்பா களங்கத்தைக் கலவத்திட்டு
அடங்காத கெந்தகந்தான் ரெட்டிப்பிட்டு
வாச்சப்பா பத்திலொன்று சிலையுமிட்டு

வாகாகக் கற்றாழைப் பாலாலாட்டு
வீச்சப்பா நாளொன்று பொற்றலையின்சாற்றால்
விளங்கவே ரெண்டுநா ளானபின்பு
பாச்சப்பா வில்லைசெய்து ரவியிற்போடு
பாங்காக மூன்றுநாள் காய்ந்தபின்பே. (எ0)

காய்ந்தபின்பு குப்பையிலே செலுத்திக்கொண்டு
கருணைபெற வேணுமென்றே வாலுகைக்கெந்திரம்
வாய்த்ததோர் முத்தீயு மூட்டுமூட்டு
வளமாக நாலாநாள் குப்பிவாங்கு
சாய்ந்ததொரு அருணனைப்போற் செந்தூரந்தான்
சாதிக்கு மெதிராளி யெதிர்க்கமாட்டான்
ஆய்ந்ததொரு அண்டத்தின் வங்கநாக
மடர்கழஞ்சி சூதகெந்தி யருளைப்பாரே. (எக)

அருளான கற்பங்கள் கொள்ளும்போது
அடங்காத தாகமொடு நீரிரக்கம்
மருளான மயக்கமொடு கண்ணிமையல்
வாதத்தி லெழுந்த யீளைரோகம்
சுருளான மந்தார காசமோடு
சுவாச காசத்துடனே சதையில்தோஷம்
கருவான கற்பத்தால் கலந்தநோய்கள்
கண்காணு தோணுமப்பா கண்டபாரே. (எஉ)

க்ஷயரோகத்துக்கு லேகியம்.

கண்டுகொள்ளு மண்டலத்தின் செந்தூரந்தான்
கலைக்குமடா நாடியெல்லா மிறுகுந்தேக
மொன்றுவிடு குன்றியிடைப் பனைவெல்லத்தில்
உத்தமனே ஒருபோது கொண்டாற்போது
மண்டுகின்ற க்ஷயரோக மிஞ்சித்தானால்
வகையொன்று சொல்லக்கே ளாடாதோடை
யிண்டுசங்கு தூதுவளை முருங்குமுல்லை
இளந்துளசி கண்டங்கத் திரியாமென்னே. (எங)

என்னவே மூலிகைதான் வகையொன்றுக்கு
இடித்ததொரு சாறப்பா படிவீதந்தான்

சொன்னசொன்ன மூலியுட சாற்றையெல்லாம்
தோணவே பனைவெல்லம் பலமுமூன்று
அன்னவே யடுப்பில்வைத்துக் காயும்போது
அரத்தையொடு திரிகடுகு திரிபலாதி
மின்னவே கற்கண்டு வசம்பினோடு
விளங்கவே வகையொன்று பலந்தான்ரெண்டே. (எச)

பலமான தொருபலந்தான் நெற்பொரியுங்கூட்டிப்
பாங்காக மருந்தையெல்லாம் சூரணித்து
செலமான பாகெல்லாம் பாகஞ்சேரில்
திடமான சூரணத்தை யதிலேபாச்சு
பிலமான தேனதிலே படிதான்வாரு
பேசாதே ஆவின்நெய் படிதான்வாரு
குலமான லேகியமாய் வழித்துவைத்து
கூசாதே பீங்கானிற் பதனம்பண்ணே. (எரு)

பதனமாய் வைத்திருப்பாய் லேகியத்தைப்
பாங்கான கழஞ்சிநிறை யெடுத்துக்கொண்டு
சுதனமா யண்டத்தின் செந்தூரத்தை
சுறுக்காகக் குன்றியிடை யொருபோதுண்ண
விதனமெல்லா மொழிந்துதடா க்ஷயரோகங்கள்
வேரோடே அறுந்துதடா உபாசத்தின்வேகம்
மதனகாமே சுரமாம் விந்துகட்டும்
மங்கையரைத் தோய்ந்தாலும் வாராதென்னே. (எசு)

வாராது கிருஷ்ண அப்பிரகந்தன்னை
வாய்ப்பாக நவநீத மாகச்செய்து
போராது பலமொன்று வாங்கிக்கொண்டு
பிலத்த வெடியுப்புடனே காரசாரஞ்
சாராது சினமொடு சூடன்கூட்டித்
தயவான கல்லுப்பு வகையொன்றுக்கு
வாருதே கழஞ்சியொன்று கூடப்போட்டு
வாகான பழச்சாற்று லொருநாளாட்டே. (எஎ)

ஆட்டியபின் வில்லைசெய்து உலரப்போட்டு
ஐம்பதெருக் குள்ளேதான் புடத்தைப்போட்டு

மூட்டியபின் னெடுத்ததனைக் கலவத்திட்டு
முழங்கவே கற்பூர வல்லிச்சாற்று
லூட்டியபின் னரைத்திடுவாய் பலந்தான்கெந்தி
உலரப்போடு நாளொன்று சென்றால்வில்லை
காட்டுவாய் ரவிமுகத்தி லுலர்ந்தபின்பு
கட்டகேள் ஐம்பதெருக் குள்ளேபோடே. (எஅ)

போடப்பா புடமாறி யெடுத்துக்கொண்டு
புகழாகப் பழச்சாறு கலவத்திட்டு
ஆடப்பா நாளொன்று அரைத்துவில்லை
அப்பனே யரைத்துமுன்போற் புடத்தைப்போடு
தேடப்பா ஆறினபின் கலவத்திட்டு
திடமான குட்டித்தக் காளிச்சாற்றால்
கூடப்பா நாளொன்று அரைத்தபின்பு
குமுறவே வில்லைசெய்து புடத்தைப்போடே. (எகூ)

புடமாறி யெடுத்ததனை யெருக்கம்பாலாற்
பேசாதே நாளொன்று அரைப்பாயப்பா
திடமாக வில்லைதனை உலர்த்திக்கொண்டு
சிறப்பாக முன்போலே புடத்தைப்போடு
நடமாடு பின்பொருக்கால் பழச்சாற்றாலே
நலியாதே தினமொன்று அரைத்தபின்பு
உடனுடு சத்துருவாங் க்ஷாரசாரம்
உத்தமனே தனுக்கெல்லாந் தின்றவாறே. (அ௦)

வாறுடனே கறுத்திருந்த தேவிநாத
மாண்டுதடா கனபுடமாய் மூட்டுமூட்டு
கூறுடனே அப்பிரக நவநீதத்தைக்
கொன்றவனாய் வயித்தியத்திற் கொட்டினேனான்
வீறுடனே செந்தூரம் நன்றாகாவிட்டால்
விளங்கவே பொற்றலையின் சாற்றாலாட்டித்
தேறுடனே நூறெருவில் புடத்தைப்போடு
செந்தூர மாகுமடா செப்பக்கேளே. (அக)

கேளப்பா அப்பிரக நவநீதத்தைக்
கெடியாகத் திரிகடுகு தன்னிற்கூட்டி

வாளப்பா தேன்நெய்யுங் கலந்துகொண்டு
மருவிய செந்தூரமிது குன்றிகூட்டி
கேளப்பா கற்பத்தால் வந்ததோஷங்
கூட்டோடே போகுமப்பா பத்துநாள்கொள்
ஆளப்பா உதிரத்தில் வாயுவெல்லாம்
அபானத்தின் கீழ்வாசல் புக்கிப்போச்சே. (அஉ)

போச்சப்பா மேகமென்ற தெல்லாம்போகும்
பூண்டதொரு நீரிரக்கம் போகுமப்பா
ஆச்சப்பா சிந்தியுட சர்க்கரையினாலே
ஆச்சரியம் அஸ்திசுரம் தோஷமில்லை
போச்சப்பா நாடிகளில் தோஷமில்லை
பிரபலமாய்த் தேகமெல்லாம் குளிர்ச்சிபண்ணும்
வாச்சப்பா வயித்தியத்திற் சர்க்கரையேசொல்வார்
வாய்ப்பேச்சோ வயித்தியந்தான் வணங்கிக்கேளே. (அங)

வணங்கியே நீகேளுபுலத்தியனே அய்யா
மாறுட்ட மில்லாமல் சர்க்கரையைச்சொல்வேன்
குணங்கியே போகாமல் மருந்துண்டாகக்
கொண்டுவந்து நிழலுலர்த்திக் காய்ந்தபின்பு
பிணங்கியே போகாம லிடித்துத்தூளாய்
பிலமாக வடிகொண்டு சூரணித்து
மணங்கியே பொடிபடிதா னென்றுக்குள்ளே
வாசமாய் நாலுபடி சலத்தைவாரே. (அச)

வார்த்திடுவாய் மறுநாளி லிருத்துப்போட்டு
மறுபடியுஞ் சலமதிலே முன்போல்விட்டு
கோர்த்திடுவா யிப்படியே பத்துவண்ணங்
கூறுகச் செய்தபின்பு சொல்லக்கேளு
பார்த்திடுவாய் புளித்ததொரு காடிக்குள்ளே
பழச்சாறு பதினறுக் கொன்றுவாரு
சேர்த்திடுவாய் முன்போலே யிறுத்துப்போட்டுத்
திறமாக மறுபடியும் செய்யக்கேளே. (அரு)

கேளப்பா புலத்தியனே சிந்தியுடகைப்புக்
கெட்டதில்லை சித்தரல்லோ செயஞ்செய்வோர்கள்

ஆளப்பா வாயிலிட்டா லண்டவரைமட்டு
மாகாகா கைப்பென்றால் வேப்பங்காயீடோ
வாளப்பா வயித்தியனே வென்றசொன்னேன்
வாதிக்கல்லோ வுரைத்த மார்க்கமல்லோ
ஆளப்பா ஆவின்மோர் படிநாலுக்குள்
அப்பனே கால்படிதான் பழசசாறாட்டே. (அசு)

பழச்சாறுவிட்டபின்பு ஒருபடியாம் பொடிக்குப்
பாங்காகக் கரைத்துவைத்து மறுநாள்சேரு
பழச்சாறு விட்டமோ ரிறுத்துப்போட்டுப்
பாலாவின் பால்படிக்குப் பொடிபடிதான்போடு
இழிச்சதல்ல வங்காள சீனிகேளு
என்சொல்வே னரைபடிதான் சீனிபோடு
தழச்சுதப்பா ரவியிலே யுலர்ந்தபின்பு
தானமிர்த சர்க்கரையா மென்றுகாணே. (அஎ)

காணப்பா இப்படியே சர்க்கரையேசொல்வார்
கைகண்ட சித்தரென்றால் பிழைக்கச்சொல்வார்
வீணப்பா மற்றதெல்லாம் சர்க்கரையேஅல்ல
வீறுகின்ற கைப்பதனை யடக்கமாட்டார்
தோணப்பா சர்க்கரையை வாயிற்போடச்
சுறுக்கடா அஸ்திசுர மெல்லாம்போகும்
பூணப்பா இதினோடே மருந்துகூட்டப்
புகலுவேன் புலத்தியனே கேளுகேளே. (அஅ)

கேளப்பா திரிகடுகு மதுரமோமங்
கெடியான வாய்விளங்கம் தறுக்குமூலங்
கேளப்பா கற்பூரம் குங்குமப்பூ
கிரும்புடனே சீரகங்கோ ரோசனைகஸ்தூரி
கேளப்பா சாதிக்காய் சாதிபத்திரி
கிருபையுடன் வகையொன்று பலந்தானென்று
கேளப்பா இளவரையாய் சூரணித்துக்
கிருபையுடன் சொல்லக்கூ விளத்தின்பூவே. (அகூ)

பூவதனை நிழலுர்த்திச் சூரணித்துப்
பூட்டிடாய் சமனாகச் சீனிக்காலாய்

பூவதனைச் சேகரித்த சூரணந்தான்
புகழமூர்த சர்க்கரைக்கு நாலுக்கொன்றாய்ப்
பாவதனைக் கலந்துகொண்டு பதனம்பண்ணு
படுபாவி மேகசலம் பறந்துபோகும்
ஆவலுற லேகியமாய்ச் செய்யக்கேளு
அப்பனே தாழைவிழுது சாறுவாங்கே. (கூ0)

வாங்கியே படிநாலு புதுச்சட்டிக்குள்
வாரப்பா படிநாலு இளநீருந்தான்
தேங்கியே ரெண்டுமொன்றாய்க் கிஷாயஞ்செய்ய
செப்புவேன் குருவிஞ்சு பலந்தானென்று
வோங்கியே சிறுபுட்கால் பலந்தானென்று
உத்தமனே யிஞ்சியது பலந்தானென்று
தாங்கியே நன்னாரிப் பலந்தானென்று
சாந்தமா யேலமது பலந்தானென்றே. (கூக)

ஒன்றாக விதுவெல்லா மிடித்துப்போட்டு
ஒருபடியா யிறுகியபின் னதிலேகேளு
நன்றான சீனிபலம் நாலும்போடு
ரசபாகம் வருநேரந் தன்னிலேதான்
வென்றதொரு அமிர்தசஞ் சீவிதன்னை
மேவிஅரைப் படியளந்து யதிலேபோடு
கன்றான ஆவின்நெய் படிகால்வாரு
கலங்காதே நெய்யிற்பாதி தேனைக்கொட்டே. (கூஉ)

கொட்டினபின் மெழுகுபதம் தன்னிலேதான்
கூறானபீங்கானில் வழித்து வைப்பாய்
வெட்டினேன் தேகத்துள் நோய்களெல்லாம்
விடயமிட்டு விடயமிட்டுச் சோதித்தேதான்
அட்டியாச் சொல்வதிந்த அமிர்தலேகியம்
அப்பனே ஆருக்குஞ் சொல்லவில்லை
மட்டில்லா வயித்தியந்தான் சாஸ்திரமுஞ்சொன்னேன்
மாறுட்ட மில்லைஒன்று மிதுக்கொவ்வாதே. (கூங)

ஒவ்வாத லேகியத்திற் கழஞ்சிதுக்கு
உத்தமனே அப்பிரக செந்தூரத்தைச்

செவ்வாகக் குன்றியிடைத் திறமாய்க்கொள்ளு
தேகத்தில் மேகசுரம் மேகவெட்டை
கவ்வாக அஸ்திசுரம் வேகம்போகுங்
கபாலத்தில் வெட்டைசுரம் குட்டம்போகும்
இவ்வகைதான் பத்துநாள் கொள்ளும்போது
எமனாலும் வெல்லரிது தேகந்தானே. (கூச)

பவளவங்கச் செந்தூரம்.

தானென்ற பவளவங்கச் செந்தூரங்கேளு
சார்வான வங்கமது பலந்தானொன்று
கானென்ற நற்பவளம் பலந்தானொன்று
கைமுறையாய்ச் சிலாசத்துப் பலந்தானொன்று
வேனென்ற பழச்சாற்றால் மூன்றுநாள்தான்
விடிகாலை மாலைரெண்டு சாமமாட்டி
கோனென்ற வில்லைசெய்து ரவியிற்போட்டு
கூறாக உலர்ந்தபின்பு புடத்தைப்போடே. (கூரு)

போட்டெடுத்து நாலிலொன்று கெந்திகூட்டிப்
புகழான பொற்றலையின் சாற்றாலாட்டி
மீட்டெடுத்து வில்லைதனை உலர்ந்தபின்பு
வெகுசுருக்கா யைம்பதெருப் புடைத்தைப்போடு
மூட்டெடுத்த கருவங்கஞ் செந்தூரந்தான்
மோசமில்லை முக்காலும் புடத்தைப்போடு
சூட்டெடுத்துப் பொடிசெய்து பதனம்பண்ணு
துடியாகக் குன்றியிடை கொள்ளுகொள்ளே. (கூசா)

கொள்ளப்பா அமுர்தசஞ்சிவி தன்னிற்
கொண்டபின்பு சலக்கழிச்சல் கடுப்புரத்தம்
விள்ளடா குறியெரிப்பு விங்கப்புற்று
மேகத்தினா லெழுந்த தோஷமெல்லாம்
வெள்ளடா அனுவளவு கற்பத்தாலே
வெழுந்ததொரு மேகசல முறிந்துபோச்சு
தள்ளா எமனணை வாசிகொண்டு
சாற்றடா மண்டலந்தான் சித்தியாமே. (கூஎ)

அயச்செந்தூரம்.

ஆமப்பா அயத்தகடு பலந்தானென்று
அப்பனே ஐந்திடைக்குச் சூதங்கூட்டி
வேமப்பா கலவத்தி லாட்டிஆட்டு
வீரமொடு நவாசாரம் பலந்தானென்று
வாமப்பா மூன்றுநாள் கைவிடாமல்
மாட்டியரைப் பொடியாகச் சிவந்துபோகும்
மோமப்பா புதுசட்டி யடுப்பில்வைத்து
மோசங்கள் வாராமல் வறுத்திடாயே. (கூஅ)

வறுக்கையிலே பதம்பாரு முருக்கம்பூப்போல்
வர்ணமிட்ட பதத்தோடு கருமல்வாங்கு
நிறுக்கையிலே குன்றியிடை பணவெல்லத்தில்
நேசமாம் கொண்டிடவே சூலைவாங்கும்
ஒறுக்கையிலே யிதின்சுறுக்கு எதுக்குமில்லை
ஓகோகோ குஷ்டமெலலா மொழிந்துபோகும்
மறுக்கையிலே யிதின்சுறுக்கு எதுக்குமில்லை
வாதநீர் விஷக்கடிகள் வாங்கிப்போமே. (கூகூ)

துரிசிசெந்தூரம்.

வாங்கிப்போந் துரிசிசெந்தூரத்தைக் கேளு
வாகான அரைப்பொடிதான் பலந்தானென்று
தேங்கிப்போங் கெந்தகந்தான் பலந்தானென்று
திறமாக வதன்பின்பு செப்பக்கேளு
தாங்கிப்போந் துரிசுமதிற் பலந்தானுமென்று
சாதகமாய் பழச்சாற்றில் தினம்ரெண்டாட்டு
ஓங்கியதோர் வீரமது கழஞ்சியொன்று
உத்தமனே அரைத்ததனை வில்லைகட்டே. (ஶ)

கட்டியே ரவிதனிலே யுலர்ந்தபின்பு
கனபுடமே போடப்பா மயங்கவேண்டாம்
ஒட்டியே ஆறினபின் செந்தூரந்தா
னுண்மையாய்த் திரிகடுகில் குன்றியிடைகூட்டி
அட்டியாய் மண்டலந்தான் கொள்ளும்போது
ஆச்சரியங் குன்மமென்ற தெல்லாம்போகும்

சுட்டியே கெற்பத்தில் தோஷம்போகுந்
துடியான கிருணியெல்லாஞ் சூட்டப்போமே. (ராக)

(அயக்காந்த செந்தூரம்.)

சூட்டப்பா வுரைப்பொடிதான் பலந்தானென்று
துடியான கெந்தகந்தான் பலந்தானென்று
மூட்டப்பா லிங்கமொடு காரசாரம்
முனையான உப்புரெண்டு சூடன்சீனம்
மாட்டப்பா வகையொன்று கழஞ்சியொன்று
வாதியென்ற பூவதிலே கழஞ்சியொன்று
வாட்டப்பா காந்தமது பலங்காலகூட்டி
வளமான பழச்சாற்றி லரைத்திடாயே. (ராஉ)

அரைத்திடுவாய் ரெண்டுநாள் கைவிடாமல்
அப்பனே உலர்ந்தபின்பு வில்லைதன்னை
விரைத்திடுவாய் வராகபுட மாறிப்பின்பு
விளங்கியதோர் முருக்கம்பூப் போலாம்வில்லை
நிறைத்ததனைப் பொடிசெய்து பதனம்பண்ணு
நிலையில்லாப் பாவியென்ற பாண்டுரோகம்
கரைதடுக்க வெட்டாது கடலேபுக்குங்
கைகண்ட செந்தூரங் கண்டுகொள்ளே. (ராங)

பாண்டு லேகியம்.

கண்டுகொள்ளு மாவின்பால் படிதானென்று
கைலோகம் நன்னாரி விலாமிச்சம்வேர்
விண்டுகொள்ளுங் கீழ்க்காய் நெல்லிவேரும்
விளங்கியதோர் வகையொன்று பலந்தானென்று
உண்டுகொள்ளும்படி யெட்டுச் சலத்தினுள்ளே
உத்தமனே போட்டுலர்த்திப் படிதானென்று
மண்டுபடாப் பாலுடனே கூடவாரு
மைந்தனே சுமுகம்பூச் சாறுவாரே. (ராச)

வாரப்பா படியொன்று பழச்சாறங்கே
வரிசையாய்ப் படியொன்று கரியான்சாறு
சேரப்பா படியொன்று கீழ்காய்நெல்லித்
தெளிவாகத் தாழைச்சாறு படிதானென்று

சாரப்பா ரெண்டுபத்துப் பலந்தான்வெல்லந்
தான்கரைத்து எரியிடவே பாகுசேரில்
ஏரப்பா திறிபலேயுஞ் சிரகத்திேனாடு
யியல்பான திறிகடுகு ஏலந்தானே. (௱௫)

ஏலமில வங்கத்தோ விலேகிருப்பு
எவாச்சாரஞ் சாதிக்காய் நறுக்குமூலம்
வால்மிளகு வாய்விளங்கம் கோட்டமப்பா
வகையொன்று பலமொன்று சூரணித்து
ஆலேவாய் சங்குபொடி யதிலேபாதி
யப்பனே பாகுவரும் போதிற்போடு
சாலவே ஆவின்நெய் படிதான்வாரு
தவறுமல் தேனதிலே பாதிவாரே. (௱௬)

வார்த்திடவே மெழுகுபத மானவாறில்
மக்களே பீங்கானில் பதனம்பண்ணு
கோத்திட்டு லோகசெந் தூரத்தில்தின்னு
குன்றியிடை தினமொன்றுக் கிருநோந்தான்
சாத்திடவே லேகியந்தான் கழஞ்சிரெண்டு
சாதித்து மண்டலமே தின்பாயாகில்
ஏத்திட்டு எந்தவகைப் பாண்டானாலும்
இலேகிய செந்தூரத்தைக் கண்டபோதே. (௱௭)

கண்டவுடன் பாண்டங்கே பறந்துதப்பா
காயங்கள் வெளுத்திருந்த தெங்கேபோச்சு
கொண்டவுடன் புளியொடு புகையிலேயுமாகா
கொடுமையுள் பெண்ணுகா துளுந்துமாகா
பண்டுடைய பத்தியத்தை விட்டானுனல்
படுபாவி லேகிய செந்தூரந்தானே
சண்டமாருதம்போலே மெய்யழித்துச
சண்ணுமடா மாற்றுமருந் தில்லேதானே. (௱௮)

மாண்டூரசெந்தூரம்.

இல்லேயென்று போகாமல் சொல்லக்கேளு
எலுமிச்சம் பழம்பத்து நாலாய்க்கீறி
தொல்லேயென்று போகாமல் அயசெந்தூரந்
தூக்கடா பலங்கால்தான் மாண்டூரத்தைச்

செல்லவே சமனாக கெந்திகூட்டித்
திரமாகப் பழச்சாற்றால் ரெண்டுசாமம்
அல்லவே அரைத்துவில்லை யுலர்ந்தபின்பு
அப்பனே வாகாகப் புடமாறிப்பின்பு
வல்லதொரு செந்தூரங் கால்பலமே தூக்கி
வகையான இந்துப்புக்கழஞ்சி ரெண்டுகூட்டே. (௯௯)

கூட்டியே முன்மருந்து மொன்றாய்சேர்த்துக்
கொண்டுநீ சீரகமோர் கழஞ்சிகூட்டி
நாட்டியே பழத்துக்குச் சேரவிட்டு
நலமான கரியன்சாறு நாழிவிட்டு
மூட்டியே கற்றாழஞ் சாறுநாழி
முழுகின்ற செருப்படியின் சாறுநாழி
தாட்டிகமாய் மூன்றுமொன்றாய்ச் சாறுவார்த்து
சட்டியிலே பழத்தையெல்லாம் பதித்துவையே. (௱)

பதித்துவைத்துத் தீயெரித்து அவித்துக்கொண்டு
பாங்கான பக்குவத்தில் புதுப்பாண்டத்தில்
பதித்துவைத்து நெற்குழியில் பத்துநாள்வை
பசுவினிட தொழுவத்தில் பத்துநாள்வை
பதித்து வைத்துப்பழந்தன்னைத் தினமொன்றாகப்
பத்துநாள் கொள்ளப்பா பாண்டுபோகும்
பதித்திருந்த வாதநீர்ப் பாண்டானாலும்
பறக்குமடா பறக்குமடா பாண்டெல்லாமே. (௱௧)

எல்லாரும் வயித்தியன்போல் நோவுபார்த்தால்
இளைத்ததுவோ நோயப்பா வேழைமாண்பர்
வல்லாரும் வாதிமகன் வயித்தியனாவான்
மற்றவர்கள் நோயறியா மடையரப்பா
சொல்லுமடா கெந்தத்தை வாங்கியேயுங்
கூட்டிடுவாய் சமனின்ற விடந்தீஞ்சானைக்
கல்லான கெந்தகமாஞ் சரமமொன்று
காணப்பா அரைத்துவில்லைக் கட்டிப்போடே. (௱௨)

கட்டியடா அஞ்செறுவிற் புடத்தைப்போடு
கலங்காத கெந்தகந்தான் என்னசொல்வேன்

வெட்டுமடா குஷ்டமொடு கிரந்திசூலை
 வெல்லுமடா சூதபற்பங் கூட்டித்தின்னு
பட்டுவிடு மேகசிர மேகசூலை
 பறக்குமே மேகத்தி லெழுந்தவாய்வு
இட்டமடா பத்துநாள் கொள்ளும்போது
 சித்தியடா கற்பத்துக் குறுதிகாணே. (௱௰௩)

வெண்கலச்செந்தூரம்.

உறுதியென்ற வெங்கலச் செந்தூரங்கேளு
 உத்தமனே வெங்கலந்தான் பலந்தானென்று
அறுதியென்ற சிலாசத்து பலந்தானென்று
 அண்டத்தோல் பலமொன்று குடிலமொருபலந்தான்
விறுதியென்ற வீரமது பலந்தான்ரெண்டு
 வீருன தாளகந்தான் பலந்தான்ரெண்டு
பொறுதியென்ற கெந்தகந்தான் பலந்தானுறு
 போட்டரைப்பாய் கலவத்தில் பழச்சாற்றுலே. (௱௰௪)

பழச்சாறு விட்டரைப்பாய் மூன்றுநாள்தான்
 பாங்காக வில்லைசெய்து ரவியில்காய்ந்தால்
வழைச்சல்லோ போட்டுதடா மாட்டிக்கொண்டு
 வராகபுட மானதிலே செந்தூரந்தான்
இழைச்சல்லோ வெல்லத்திற் குன்றியிடைகொள்ள
 என்னசொல்வேன் குன்மங்க லெட்டுந்திருந்
தழைச்சிருந்த மேகத்தி லெழுந்ததெல்லாந்
 தவறுண்டே போகுமடா சார்ந்துபாரே. (௱௰௫)

முத்துச்செந்தூரம்.

பாரப்பா முத்துமணிப் பலந்தானென்று
 பதைப்படங்கா நாகமது பலந்தானென்று
சேரப்பா சூதமொடு பலந்தானென்று
 சிறப்பான வீரமொடு பலந்தானென்று
வாரப்பா மூலைப்பாலி லரைப்பாயோர்நாள்
 வாகாக வில்லைசெய்து ரவியிற்போடு
வேரப்பா பூக்கமுஞ்சி கெந்தகந்தான்
 விளங்கவே ரெண்டுபலங் கூட்டியாட்டே. (௱௰௬)

ஆட்டியே புடம்போடு கோழியப்பா
அரகரா முத்துமணிச் செந்தூரந்தான்
நாட்டவே கிரந்தியுறும் யோனிப்புற்றும்
நல்லிலிங்கப் புற்றுடனே கண்டமாலே
முட்டவே மூலங்கள் பிளவையரையாப்பு
மூக்கினுள்ளே சதைத்துணுக்காம் பீனிசங்கள்
காட்டவே செந்தூரங் கண்டபோதிற்
காணப்பா கெடிகலங்கி யோடுந்தானே. (௱௰௭)

தாளகச்செந்தூரம்.

தானான தாளகந்தான் பலந்தானென்று
சம்பழத்தின் சாறுபடி சுறுக்குப்போட்டு
வேனான முலைப்பால் கால்படியேதாக்கு
விளங்கவே பூரலறும் பின்புகேளு
வானான திருகுகள்ளிப் பால்தானுழி
வாங்கியதிற் போடுகிற மருந்துகேளு
கோனான திருகுகள்ளி உப்புபூவுங்
கொடிய நவாச்சாரமோடு வீரந்தானே. (௱௰௮)

வீரம்பூரத்துடனே வெடியுப்புச் சீனம்
விளங்கவே வகையொன்று கழஞ்சியொன்று
சேரவே பொடித்தந்தப் பாலிற்போடு
சிறப்பாக மூன்றுநாள் செலமதாகும்
நீராலே தாளகத்திற் காரங்கால்தா
னிறுத்துவிடு முன்சொன்ன பலவிதத்திற்
சாரமது கால்பலந்தான் கூட்டிக்கொண்டு
சாகவே யரைத்திடுவாய் மூன்றுநாளே. (௱௰௯)

நாள்மூன்று அரைத்துவில்லைப் பணம்போற்தட்டி
நவமாகச் சுத்திசெய்வாய் தாம்பிரத்தைக்
கோள்மூன்றுய்த் திருமப்பா பூரல்வாங்கும்
கூறுவேன் அண்டத்தோல் பலந்தானென்று
கேள்மஞ்சள் கட்டான வளையலோடு
கெடியான வெடியுப்புக் காரஞ்சாரம்
பாள்காணுப் பூவீரம் பூரஞ்சீனம்
பாங்காக வகையொன்று கழஞ்சிரெண்டே. (௱௨௰)

ரெண்டுடனே யண்டோடு கூட்டிக்கொண்டு
நிரையாகப் பழச்சாறு அரைப்படிதான் விட்டாட்டிக்
கொண்டுடனே வில்லைசெய்து உலர்த்திக்கொண்டு
கொடுத்திடுவா யொவ்வாத ராசிக்கேதான்

பண்டுடனே தாம்பிரமது பலந்தானஞ்சு
பாங்காக குகைக்குள்ளே உருகும்போது
தண்டுடனே தாம்பிரத்திற் பிலத்தசுத்த
சண்டாள வூரலறுந் தாம்பிரந்தானே. (௱உக)

தானன்றாய்ச் சுத்திசெய்து தாம்பிரந்தன்னைத்
தடையறவே மறுகுகையி லுருக்கும்போது
ஏனென்ற தாளகத்தின் மெழுகுவில்லை
இயைந்திடுவா யொவ்வென்றாய்க் கொடுத்தபின்பு
தேனென்ற நிறம்போச்சு வெண்கலம்போலாகும்
திட்டமாக வடித்திடனே தகர்ந்து தூளாம்
பானென்ற கலவத்தில் பொடித்துக்கொண்டு
பாங்காகக் கண்டிடைக்குச் சூதம்வாரே. (௱உஉ)

சூதத்தி னிறைபோடு வீரந்தன்னைத்
துடியாக முலைப்பாலி லரைத்தபின்பு
நாதமென்ற பூநீறு ரெண்டுபத்துக்கொன்று
நாட்டியரை மூன்றுநாள் பின்புகேளு
பாதமென்ற வாலரசமட்டைப் போலாம்
பண்பாகக் கண்டிடைக்கு கெந்திகூட்டி
நீதமென்ற டோற்றலையின் சாற்றாலாட்டி
நிலைத்திடுவா யன்பதெருப் புடத்தைப்போடே. (௱உ௩)

புடத்திலே யிருந்துறைத்த செந்தூரந்தான்
பேசாதே வயிரவர்க்குப் பூசைபண்ணு
திடத்திலே தாம்பிரத்தின் செந்தூரத்தைத்
தினங்குன்றிப் பிரமாணம் திரிகடுகிற்சேர்த்து
நடத்திலே மண்டலந்தான் உண்ணும்போது
நாளான பீலிகையுங் குன்மத்தோடே
சடத்திலே உண்டான கனப்புவாய்வு
சாங்கமாய் தீர்க்குமடா தாம்பிரத்தானே. (௱உ௪)

தாம்பிர செந்தூரத்தை தின்னும்போது
தட்டுண்டு குன்மம்போ மனுபானங்கேள்
காம்பியே பிளித்திருந்த காடிபடியொன்று
கண்டங்கத் திரிச்சாறு பாடிதானென்று
தேம்பியதோர் திருமேனிச் சாறுபடியொன்று
சிறுசெருப்புக் கால்சாறுபடிதானென்று
வேம்பினிட பட்டைச்சாறு படிதானென்று
மேலான கையான்சாறு பாடிதானென்றே. (௱உ௫)

ஒன்றான விஞ்சிச்சாறு படிதானென்று
உத்தமனே பசுமலையின் பட்டைதன்னை

நன்றாக வெண்படிநீ ரொருபடியிற்காச்சி
நலமான கிஷாயமது படிதானென்று
மன்றாகப் பிரமிச்சாறு படிதானென்று
வாகாக விதுவெல்லாந் தாளிக்குள்ளே
சென்றாட வொன்பதுசா றென்றாய்ச்சேர்த்துச்
செப்பக்கேள் பனைவெல்லம் சேரப்போடே. (௱௨௬)

போடக்கேள் மூன்றுபத்து பலந்தான்போடு
புகழான வெள்ளெருக்கம்வேர்ப் பச்சைப்பட்டை
ஆடப்பா பலமொன்று அரைத்துக்கொண்டு
அப்பனே அன்பதுக்காய்க் கச்சல்வாங்கி
சூடப்பா நன்றாக நறுக்குத்தட்டி
சுகமாக அரைத்திடுவாய்ப் பிசின்போலாகத்
தேடப்பா விருமருந்தனு சாற்றினோடே
சேர்த்துநீ கரைத்திடுவாய் செப்பினேனே. (௱௨௭)

செப்பினேன் உனக்காகப் புலத்தியனேஅய்யா
தீராத குன்மமெல்லாஞ் சேரத்தீரும்
செப்பினேன் சோதிநீர் பலந்தானென்று
திரைநுரையின் நீறுபலஞ் சங்குநீறு
செப்பினேன் பலமொன்று பூநீறப்பா
சேரவே யிதுவெல்லாஞ் சுட்டசுண்ணஞ்
செப்பினேன் திறிகடுகு வாய்விளங்கந்
திப்பிலி மூலத்தினொடு சித்திதானே. (௱௨௮)

சித்திர மூலத்தினொடு கடுகுவோமம்
செவ்வியங் கோஷ்டமதானு சீரகந்தான்
முத்தியரையாங் காயமொடு வசம்புகாந்த
மூழுந்தவே வகையொன்றுக் கரைப்பலந்தான்சேரு
சத்தியெவாச்சாரம் நவாச்சாரம் சீனம்
சவுக்காரம் பொரிகார மிணங்கன்சூடன்
பத்தியாய்க் கொடிக்கழற்சிப் பருப்பிந்துப்பி
பாங்கான கல்லுப்புப் பாதிசேரே. (௱௨௯)

பாதியாம் வகையொன்று காற்பலந்தான்கூட்டிப்
பண்பாகச் சரக்கெல்லாம் சூரணித்துக்கொண்டு
நீதியாங் கருவேம்பி னிலையைவாட்டி
னோரகஞ் சூரணித்து மருந்திற்சேர்த்து
சாதியாஞ் சாரெல்லாம் பாகுசேரில்
தக்கவொரு சூரணத்தை யதிலேபோட்டு
கோதிடுவாய்த் தேனுமொரு படிதான்வாரு
கூறான நெய்யுமொரு படிதான்வாரே. (௱௩௰)

வாரப்பா மெழுகுபத மானவாறே
வாய்ப்பாகப் பீங்கானில் வழித்துவைப்பாய்
சேரப்பா லேகியந்தான் கழஞ்சியள்ளிச்
சிறப்பாகத் தாம்பிரச் செந்தூரத்தைச்
சாரப்பா குன்றியிடை யாகக்கொள்ள
சாந்தமாம் புகையிலையும் புளியுந்தள்ளு
வேரப்பா அஷ்டகுன்ம மெட்டுந்தீரும்
வெகுசுறுக்கு நவசிந்தாமணி யென்றேனே. (௱௩௧)

நவசிந்தாமணி.

நவசிந்தா மணியான லேகியத்தை
நல்லதொரு கற்பசித்திக் காகச்சொன்னேன்
புவனங்கள் திரிந்தலையும் வயித்தியனேகாண்பான்
புத்தியுள்ள வாதிமகன் குன்மந்தீர்ப்பன்
எவராலுந் தாம்பிரத்தைச் செயிக்கமாட்டார்
இந்தவகை லேகியமுஞ் செய்யமாட்டார்
அவன்பிழைப்புக் கேதாலு மொன்றைச்செய்வா
னாகாதவயித்தியனு மாமென்றோதே. (௱௩௨)

ஓதினேன்தீட்சைபிரு நூற்றுக்குள்ளே
யுத்தமனே வடுகனுட பூசைமார்க்க
மாதியாம் வயித்தியனுக் கப்பாகேளு
அவனன்றிச் செந்தூரமாகாதொன்றுஞ்
சாதியாம் சூத்திரசென் மத்தோர்க்கன்றிச்
சகலருக்கும் பலியாது தவறுண்டேபோம்
வாதியா மகன்றனுக்கு வயித்தியமுஞ் சொன்னேன்
வயிரவனைப் பூசைபண்ணி வணங்கிப்பாரே. (௱௩௩)

அயக்காந்தச்செந்தூரம்.

பாரப்பா அரைப்பொடிதான் பலந்தானென்று
பரிவான காந்தமது பலந்தானென்று
சேரப்பா கெந்தகந்தான் பலந்தானென்று
திரமான பூநீறு கழஞ்சியொன்று
காரப்பா பழச்சாற்று லிரண்டுசாமங்
கடுகவே யரைத்துவெய்யிற் காயப்போட்டு
ஆரப்பா மறுநாளும் ரெண்டுசாம
மடங்கவே யரைத்துவில்லைக் காய்ந்தபின்பே. (௱௩௪)

பின்பதனைச் சுடுசெயகல் குகைக்குள்வைத்துப்
பேசாமல் மேலுமதால் மூடிக்கொண்டு

வின்பதனைச் சீலைமண்தான் ரெண்டுசெய்து
 விதமாக முட்டளவு குழிதான்வெட்டி
அன்பதெருக் குள்ளேதான் புடத்தைப்போடு
 ஆறியபின் னெடுக்கச் செந்தூரமாகுந்
துன்பமது கற்பத்தாற் சூடுகொண்ட
 தோலோடு அஸ்திமுதற் கனப்பும்பாரே. (௱௬௫)

சுனத்திருந்த நீர்தோஷங் கபாலவாய்வு
 கண்புகைச்சல் காதுமந்தங் காணுதோடு
மனத்துறவே சாதிக்காய் சாதிபத்திரி
 மதுரஞ்சீகரமோ மம்குரு சானியோடு
இனத்திருந்த வாய்விளங்கம் நறுக்குமூல
 மேலமதி விடையமொடு காயஞ்சுக்கு
தனத்திருந்த திப்பிலியு மிளகுங்கூட்டிச்
 சதிரான அமின்கோஷ்டந் தானென்றுமே. (௱௬௬)

ஒன்றான மருந்தெல்லாம் வகைக்குக்கேளு
 உறவாகப் பலமொன்று வறுத்துக்கொண்டு
நன்றாகச் சூரணித்துப் பின்புகேளு
 நாலுபலம் பனைவெல்ல மெள்ளுஞ்சேர்த்துக்
குன்றும இடித்ததனை மையாய்ச்சேர்த்துக்
 கூட்டப்பா சூரணத்தை ரேகித்தேதான்
சென்றுடும் நறுந்தேனைக் கால்படிதான்விட்டுச்
 சிறக்கவொரு பீங்கானி லடைத்துவையே. (௱௬௭)

அடைத்துவைத்த மருந்தப்பா கழஞ்சிரெண்டு
 அயக்காந்தச செந்தூரங் குன்றிகூட்டி
யிடைத்துவிடு மண்டலந்தான் தின்னுதின்னு
 யெளிதல்ல ஆறுவகைக் கிருணியெல்லாஞ்
சடைத்தங்கே யோடிப்போம் புவியுள்ளோர்க்குத்
 தாகமிறைற் புளியோடு புகையிலையுமாகா
உடைத்துவிடு முதாரத்தில் நின்றவாய்வு
 ஒழுடிந்து போகுமடா உண்மைகாணே. (௱௬௮)

வெள்ளியச்செந்தூரம்.

காணப்பா வெள்ளியஞ் சுத்திசெய்து
 கசகாம லுருக்கியே கலவத்திட்டு
பூணப்பா வெடியுப்பு ரோமப்பூவும்
 புகழாகப் பலத்துக்குக் கழஞ்சிவீதம்
தோணப்பா நாசிவங்கம பலந்தானென்று
 துடிகொண்ட கெந்தகந்தான் பலந்தான்ரெண்டு

நாணப்பா பழச்சாற்று லிரண்டுசாமம்
 நனுருக வரைத்துவைப்பா யெருக்கம்பாலே. (௱௩௯)

பாலாலே சாமம்ரெண்டு ஆட்டிக்கொண்டு
 பதைப்படங்கா நவாச்சாரம் பலமுங்கால்தான்
வாலாகப் பொற்றலையின் சாற்றுலாட்டி
 மாடடுவாய் சாமம்ரெண்டு மடங்குமப்பா
சேலாக வில்லைசெய்து ரவியிற்போடு
 திரமாக மூன்றுநாள் காய்ந்தபின்பு
காலாக நூறெருவிற் புடத்தைப்போடு
 கைமுறையாய் ராசிவங்கங் கனகந்தானே. (௱௪௰)

கனகந்தான ராசிவங்கஞ் செந்தூரத்தைக்
 கைமுறையா யெட்டிலொன்றுஞ் சூதங்கூட்டிக்
கனகந்தான் தேகமப்பா சீனியிற்கொள்ளக்
 கண்துலங்குங் கபாலபுற்றுங் கபாலவாய்வு
கனகந்தான் அஸ்தியிலே பாய்ஞ்சவெட்டைக்
 கமல குன்மமோடு கண்டமாலைக்
கனகம்போ லுறைந்திருந்த நோய்களெல்லாங்
 காணுதே கடல்புக்குங் கருத்துள்ளோர்க்கே. (௱௪௧)

கருத்துறவே வாதிமகன் வயித்தியஞ்செய்தால்
 கதிகெட்ட நோயாளி பணியவேணும்
கருத்துறவே மருந்துக்குப் பத்தியம்வேணுங்
 கைமுறையாய்ச் செய்கின்ற வயித்தியர்க்குக்
கருத்துறவே மனதுவர நடக்கவேணுங்
 கழுதைபோலே யிருந்தால் பலியாதொன்றுங்
கருத்துறவே யிதுக்கல்லவோ சித்தர்சாபங்
 கட்டினர் மனதுவர நடந்துக்கொள்ளே. (௱௪௨)

நடந்துக்கொள்ளே நோயாளி ராசாவென்றால்
 நாடடினு லவர்க்கங்கே மருந்தேறுது
துடர்ந்துகொள்வே னென்றுன்னை பத்திவைத்தால்
 சுழுக்காகத் திருமடா சாபமேது
அடர்ந்துபோ யவன்வாசல் காத்தாயானால்
 அவனுக்குக் கொஞ்சம்போ லுபசாரஞ்செய்யான்
நடந்தனக்கு நோய்வந்தால் குருவேயென்பான்
 சாதுரிய மாய்த்தீர்ந்தால் தம்பியாமே. (௱௪௩)

தம்பியென்பான் நோயெல்லாந் தீர்ந்தபின்பு
 தாய்தந்தை குருவென்பான் நோய்தீராமுன்பு

வெம்பியதோர் மனமாகி வயித்தியனைப்போற்றி
வேணபடி யுபசாரம் பின்பாகட்டென்பான்
கும்பியல்லோ கொதிக்குதென்று வுள்ளம்நொந்து
கொண்டங்கே வயித்தியனர் கூர்மைக்கேதான்
சும்பியே முகம்வாடிற் சாபம்வேறு
சாத்தினினே னிதுவறிந்து மருந்துவாங்கே. (௱சச)

வாங்கியே விசுவாச மாகக்கொண்டால்
மருந்தென்ன வயித்தியன் கைப்பட்டாற்போதும்
ஏங்கியே திரியாதே வயித்தியசாப
மேகிடவே சாபத்தினி விர்த்திகேளு
ஓங்கிலியோம் விந்துவுட னுதக்கூட்டி
உறவாகச் சிங்கென்று ஒருலெட்சந்தான்
பாங்கியே வடுகனுட சாத்தியந்தான்
பார்பிரமன் மாயனொடு பகரக்கேளே. (௱சரு)

வயித்தியமுறைமை.

கேளப்பா வயித்தியந்தான் சொன்னபடிகேட்குங்
கெடியாகச் சித்தருட மறப்பையெல்லாம்
வாளப்பா வெளியில்விட்டேன் வயித்தியத்துக்காக
மாநிலத்து நோயாளி மயங்காமலப்பா
கோளப்பா வாராமற் சாபகோபங்
கூறினேன் வாதிமகன் வயித்தியனுகில்
தேளப்பா கொட்டுதல்போல் பூவினீறு
சேராட்டல் செந்தூரஞ் சேரப்போச்சே. (௱சசு)

போச்சுதென்று மலையாதே சொல்லக்கேளு
புகழான பூநீறுபலந்தா னென்று
காசசென்றேன் சுத்தசலந் தன்னிற்காச்சிக்
காச்சுவது கடுவெய்யில் நீரேவற்றி
வாச்சென்றே யிருக்கும் பூமா தளங்காய்
மகத்தான பூவப்பா விந்தச்சுன்னம்
பாச்சென்றேன் கிலவுப்பு மந்தச்சுத்தி
பண்ணப்பா பாறையுப்பு மந்தப்பாங்கே. (௱சஎ)

பாங்குடனே முப்பூவும் வெடியுப்போடு
பழிகாரச் சூரனொடு அஞ்சும்நோய்
வாங்கியே கிழிஞ்சியுட சுன்னந்தன்னை
வரிசையாய்ச சமபாசமாக வாட்டித்
தாங்கியே வெள்ளெருக்கம் பாலுவார்த்துச்
சாரமாம் பழச்சாறுந்தான் வெவ்வேறே

யோங்கியே யிருசாமம் ரெண்டுநீரு
முத்தமனே யரைத்துவில்லை ரவியிற்போடே. (௨௪அ)

போடப்பா பத்துநாள் காய்ந்தபின்பு
புகழான சுண்ணும்பு பொடிக்குள்வைத்து
சூடப்பா கமலம்போல் தீயைமூட்டித்
துடியாக விருசாமஞ் சேரநீரும்
மாடப்பா விதினுட்டுச் செந்தூரத்தாட்டு
வடங்காத நோய்களெல்லா மகன்றுபோகுந்
தேடப்பா சிப்பியுட சுன்னஞ்சொல்வேன்
திரமான பூநீற்றின் குருவதாமே. (௧௪௯)

கிளிஞ்சிற்சுன்னம்.

குருவாகுங் கிளிஞ்சியுட சுன்னமப்பா
கூறக்கே ளுமைதன்னைச் சுன்னம்பண்ண
தருவாகுங் கற்சுன்ன மூவருங்கூட்டிச்
சாதகமாய்ச் சுத்தசலந் தன்னிலேதான்
திருவாக கரைந்ததிலே கிளிஞ்சியிட்டுத்
தீயெரிப்பா யிருசாமஞ் சென்றபின்பு
அருளான ஊமைதனைப் பேசப்பண்ணி
ஆச்சரியம் உள்மருந்து பூச்சக்கேளே. (௨௫0)

பூச்சப்பா வீரமொடு சூடன்சினம்
புழுகுனவாச் சாரமொடு கல்லுப்போடு
வீச்சப்பா வகையொன்று பலந்தானென்று
மீறியதோர் கிளிஞ்சியது பலந்தான்பத்து
ஆச்சப்பா மருந்தெல்லா மரைக்கும்போது
அண்டத்தின் நீறுபலம் ரெண்டுபோடு
திச்சப்பா பழச்சாற்றி லரைத்துக்கொண்டு
சிறக்கவே யுடன்பூசிப் புடைத்தைப்போடே. (௨௫௧)

புடம்போடு நூறெருவில் பிலத்தசுன்னம்
பின்பொருக்கால் வெண்கருவா லரைத்துவூது
திடமாகச் சுறுக்கிட்ட சுன்னமாகுஞ்
செய்கின்ற கைமுறைக்குச் சோம்பலாகா
நடமாட வெளுக்குமட்டும் வெண்கருவாலாட்டி
நாளாறு புடம்போடு கடியசுன்னம்
உடனுடு சத்துருவா மண்டநீறும்
உற்றதொரு கிளிஞ்சிதன்னை மடக்கலாச்சே. (௨௫௨)

மடக்குமடா புலத்தியனே யுனக்குச்சொன்னேன்
வரிசையா யண்டமது பத்துவாங்கி

கிடக்குமடா பாண்டத்துள் பீங்கான்வைத்து
கெடியாக வதிலிட்டுப் பழத்தின்சாறு
கட்க்குமடா படியொன்று அழுங்கவாரு
கடுங்காரச் சீனமது கழஞ்சிரெண்டு
அடக்குமடா பொடிசெய்து வதிலேபோடு
அஞ்சுநாள் கடுவெயிற்கு ளண்டநீரே. (கடுக)

அண்டத்தின் தோடெல்லாம் உருகிச்சாற்றி
லப்பனே உறைந்திருக்கு மெடுத்துக்கொண்டு
அண்டத்தைச் சவ்வுடனே யெறிந்துபோட்டு
அழகான பழச்சாறு சீனத்தோடு
பிண்டத்தைக் கொல்லுவே னென்றுசொல்லி
பேரிட்டு மூன்றுநாள் ரவியில்நீறும்
அண்டத்தி னீறுதனைக் கலவத்திட்டு
அதிகாரி யெருக்கம்பா லதனிலாட்டே. (கடுச)

ஆட்டுவா யிருசாமம் வில்லைசெய்து
அப்பனே ரவிமுகத்திற் காய்ந்தபின்பு
மூட்டுவா யைம்பதெருப் புடத்தைப்போடு
முக்கியமாய் நீறும்பின் னெடுத்துக்கொண்டு
நாட்டுவாய் பத்திலொன்று வீரங்கூட்டி
நலமான வெண்கருவா லரைப்பாய்சாமம்
பூட்டுவாய் வில்லைசெய்து ரவியிற்காய்ந்தால்
புடமொன்று ஐம்பதெருக் குள்ளேபோடே. (ாடுரு)

போட்டெடுத்த அண்டத்துப் பொலிந்துநீரும்
போக்கோடே யிந்தவகை யாருஞ்சொல்லார்
தாட்டிகமா யூமைதனைச் சண்ணிநீத்துஞ்
சனவட்டக் குருவல்ல அண்டவித்தை
மாட்டவே வாதத்தி லேறுஞ்சுண்ணம்
வளமாக நவாச்சாரம் சமனுய்க்கூட்டி
மூட்டிலே கொண்டங்கப் பனியில்வைக்கநீராம்
முறையோடு எறுதற்குத் துருசிமுந்தக்கொல்லே. (ாடுசா)

கொல்லுமடா அண்டநீர் கோபமெத்த
கொடும்பாவி யுபசரத்தி லாதிச்சுன்னங்
கொல்லுமடா சிப்பிதனைக் கொன்றுறகேளு
கூறுகிற சிப்பிவித்தை தொலையாதப்பா
கொல்லுமடா சிப்பிசுன்னத் தாலேகேளு
கொத்தான சவுக்காரம் செய்யும்போது
கொல்லுமடா பூநீறு கல்உப்பைத்தான்
கூசாமற் பாறையுப்பைக் கொல்லுந்தானே. (ாடுள)

தானென்ற சவுக்கார மேதாலாசசு
தருவாகிக் கறுத்திருந்த நெடியசிப்பி
வானென்ற அண்டத்தி னீரால்சிப்பி
மகத்தான சுன்னமடா ஆதியாதி
வேனென்ற வயித்தியத்தை விள்ளப்போய்த்தான்
வேரான வழலையுமுஞ் சிப்பிச்சுன்னம்
நான்நன்ருய்ச் சொல்லிவிட்டே னிதுபொய்யாது
நலமான அண்டத்தாற் சிப்பிநீறே. (௱௫அ)

அண்டத்தில் சிப்பிதன்னைச் சுன்னமாக்கி
அரகரா சவுக்காரம் செய்வாயாகில்
தெண்டனிட்டு வாதம்வந்து முன்னேகாணுஞ்
செப்பினேன் புலத்தியனே செப்பக்கேளு
கண்டதொரு குருவென்பார் பூத்தானென்பார்
கைமுறையாய்க் காணூர்கள் கழுதைமர்ண்பர்
விண்டதொரு பூநீறுஞ் செய்யமாட்டார்
விளங்கவே சொல்லிவிட்டேன் வேதைபாரே. (௱௫௬)

பாரப்பா சட்டைமுனி பூநீற்றுவித்தை
பாடினூர் பூவதனைக் குருப்பண்ணுமற்
கூறப்பா சொல்லுகிறேன் பூநீருகக்
கொடியதொரு சிப்பிசுண்ணம் பலந்தானென்று
சேரப்பா சோடசத்தின் குருத்தானன்றி
செகமறியாப் பூநீறு செப்பக்கேளு
சாரப்பா முதற்றீட்சைப் பூவைக்கேளு
சாதகமாய் நாலுபலம் தாக்கிபாட்டே. (௱௬௰)

தாக்கிடாய் நிலவுப்புப் பாறையுப்புத்
தன்னேடு வகையொன்று பலத்தில்பாதி
தாக்கிடா யுப்புக்குப் பாதிவெள்ளை
சவ்வீரம் வெள்ளைக்கு நாலிலொன்று
தாக்கிடாய் சூடனங்கே பலமுங்கால்தான்
தயவான புழுகதிலே கழஞ்சிகூட்டு
தாக்கிடாய் வண்டரிசி கழஞ்சிகூட்டிச்
சாதகமாய் மருந்திலக்க அரைத்துக்கேளே. (௱௬௧)

அரைத்திடுவாய் சாமமொன்று பழச்சாற்றுலே
அப்பனே யெருக்கம்பால் சாமமொன்று
அரைத்திடுவாய் வெண்கருவால் சாமமொன்று
அதியதொரு கடுங்கார மெத்தவேண்டாம்
அரைத்திடுவாய் வில்லைசெய்து ரவியிற்போட்டு
அப்பனே பட்சமொன்று காய்ந்தபின்பு

பரைக்காதி சிவபூசைப் பாங்காய்ப்பண்ணு
பரிவாகச் சுண்ணத்தி லெரித்திடாயே. (௱சுஉ)

எரித்திடுவாய் முத்தியு மூன்றுசாமம்
என்னசொல்வே னதிகுரு வானவாறு
தரித்திரம்போம் வாதம்உள்ளாஞ் சவுக்காரமென்ன
தாளிப்பார் தாளிப்ப ரெண்ணெவாங்க
எரித்திடுவாய் வாட்டிடுவார் வறுப்பார்கோடி
யிதமாகப் புடத்தினிலே வைப்பார்கோடி
பெருத்ததொரு வித்தையிது சித்தர்க்காகும்
பேசாதே உலகத்தோர் பிழைக்கும்வாறே. (௱சுௗ)

வாறான உவர்ப்பூவைக் குருவாய்ச்செய்ய
மாட்டினேன் சவுக்காரம் வழலைகொக்குந்
தேறான பூவினுட குருவைக்கொண்டு
செயநீரே செய்துகொண்டு உப்பைக்கட்டி
வீறான வுப்பாலே சூடன்கட்டி
வேதைகண்ட மார்க்கமடா விளங்கிப்பாரு
நீறான துறைமுகமோ கோடாகோடி
நிலைத்துநின்ற கட்டினமோ கோடியாமே. (௱சுச)

ஆமப்பா விந்தாதி குருவினாலே
அடங்காத தொழிலப்பா அமைக்கப்போகா
தாமப்பா சட்டமுனி ரெண்டுகாண்டஞ்
சாற்றியதோ ராயிரத்திற் குருப்பூநீறு
வேமப்பா விக்குருவைக் கொண்டுதானும்
வேருமட்டுந் தூருமட்டும் வினவினாற்கொள்
தாமப்பா சரக்கெல்லாம் வேதையோடுஞ்
சட்டமுனி ஆயிரத்தின் சார்வுகாணே. (௱சுரு)

காணப்பா கைமுறைக்குச் சட்டநாதர்
கருத்துறவே சாஸ்திரத்திற் காட்டினார்கேள்
பூணப்பா ஒருதுறையோ கோடாகோடி
பொன்னோடு வெள்ளிவித்தை ரெண்டும்நேரே
கோணப்பா தோணுமட்டுந் துறையோகோடி
சூட்டினா ரதுகண்டு தோணிப்பாரு
ஊணப்பா வதிலிருந் தூன்றிவாத
முற்றுப்பார் தவறாது ஒன்றுந்தானே. (௱சுசு)

ஒன்றான வயித்தியத்தின் குருவுஞ்சொன்னேன்
ஓகோகோ வாதத்தின் குருவுஞ்சொன்னேன்
ஒன்றான மூதண்ட லேகியத்தை
உணர்வாக சொல்லிவிட்டேன் தீட்சைக்குள்ளே

ஒன்றான பூசைவிதி செய்யுங்கால
முறவாடு மறைக்கழஞ்சி உள்ளேகொள்ள
ஒன்றான நினைவாலே ஒளியைக்காணு
முற்றுப்பா ராறுமங்கே ஓடியேறே. (௨௬௭)

ஏறடா குளிகையிட்டுக் கற்பங்கொண்டு
யிருக்கையிலே உட்பசந்து பெருத்துநொந்து
தேறடா தேகமெல்லாம் வெளுப்புக்கண்டு
சிந்தையிலே துயரமாய்த் தசைநீர்விம்மி
மாறடா தசைவீங்கி மயக்கமானல்
மறுபடிதான் குட்டமிற மாறிப்போக
வீறடா சொல்லுகிறேன் சாதிலிங்கம்
விளங்கவே பலமொன்று வாங்குவாங்கே. (௨௬௮)

வாங்கிடுவா யரைப்பொடிதான் பலந்தானென்று
வளமான வீரம்பூக் காராசாரந்
தாங்கிடுவாய் வகையொன்று பலங்கால்வீதஞ்
சாதிலிங்கத் திடைபோடு தாஞ்சிங்கி
ஓங்கிடுவாய் வகையொன்று சூதங்கூட்டி
உத்தமனே பழச்சாற்று லரைப்பாயப்பா
பாங்குடனே யிருசாம மரைத்தபின்பு
பதைப்படங்கக் குகைக்குள்ளே பதித்துவையே. (௨௬௯)

வையப்பா மேல்மூடிச் சீலைசெய்து
வரிசையா மஞ்செருவிற் புடததைப்போடு
செய்யப்பா வாறினபின் னெடுத்துக்கொண்டு
திரும்பவுந்தான் குகைக்குள்ளே சேரவைத்து
கையப்பா கருவளையல வீரங்காரங்
கைமுறையாற் சாரம்பூ நீறுகூட்டி
தொய்யப்பா அயக்களங்கந் தனக்குநேராய்ச
சூட்டியே உருக்கையிலே சுத்தமாமே. (௨௭0)

சுத்தித்த லோகமடா வங்கமாச்சு
தொடுகுறிபோற் சூதத்தைச சரியாய்ச்சேரு
மத்திக்க உருகுமடா சூதந்தானு
மடங்காத சூதத்தை மடக்கிக்கொல்லும்
பத்திதரும் வீரமதிற சரியாய்ச்சேரு
பாஙகான வாலேரச மாகும்பாரு
அத்திகரு முலைப்பாலா லாட்டுஆட்டு
அம்மம்மா செந்தூர மாகும்பாரே. (௨௭௧)

ஆகுமடா கெந்தியது ரெட்டிப்பிட்டு
அப்பனே பொற்றலையின் சாற்றாலாட்டிச்
சாகுமடா மூன்றுநா ளரைத்தபின்பு
சாத்தடா சிவக்குமட்டும் புடத்தைப்போடு
பாகுபெறும் குக்குடமாம் புடத்துக்கேதான்
பறக்குமப்பா பதினெட்டுக் குட்டமெல்லா
மேகுமடா கிராந்தியது சூலைமேகம்
என்சொல்வேன் குன்மியிடை யிதமாய்க்கொள்ளே. (௱௭௨)

துளசிலேகியம்.

கொள்ளவே சொல்லுகிறேன் துளசிதன்னைக்
கூறுகச் சாறுபலம் ஒன்றுவாங்கி
அள்ளவே பனைவெல்லம் பலந்தானாலு
அதிலிட்டுப் பாகுபெறக் காச்சுக்காச்சு
துள்ளவே திரிகடுகு மதுரம்ஏலம்
சுறுக்கான காருகோ லரிசிகெந்தி
வள்ளவே பறங்கியுட பட்டையோடு
வாய்விளங்கம் கோட்டமொடு வகைதானென்றே. (௱௭௩)

வகையொன்று பலவீதமாக வாங்கி
வாகாகச் சூரணித்துப் பாகிற்கிண்டி
தகையாதே நறுநெய்தான் படிகால்விட்டுச்
சாரமுள்ள தேன்நெய்க்குப் பாதிகூட்டித்
துகையாக மெழுகுபதந் தன்னிலேதான்
தோன்றவே வழித்துவைப்பாய் பீங்கானுள்ளே
பகையான நோய்களொன்னும் பதினெட்டுக்குட்டம்
பறக்குமடா லேகியங் கண்பார்க்கு முன்னே. (௱௭௪)

கண்பார்த்துக் கைபார்த்து முகத்தைப் பார்த்துக்
கண்டிதமாய் பண்டிதத்தைக் கருவாய்ப்போடு
விண்பார்த்து மேனும்பாய்த் திரிந்தாலொன்று
மெய்ப்படா தப்பாகேள் விருதுகட்டு
பண்பார்த்து படித்ததனல் வருவதேது
பாசாங்காய்த் திரிந்தாக்கால் வயித்தியமாமோ
பெண்பார்த்து மோகமுற்ற பித்தர்போலே
பிலக்கவே வயித்தியத்தைப் பேணிப்பாரே. (௱௭௫)

பாரப்பா உளுந்துமேல் தோலுபோக்கி
பாணையிலே ஊறவைத்துப் பதமேயாகிற்
சீரப்பா பருக்கையதா யாட்டிக்கொண்டு
சிறுகவே காந்தையுட விலையும்நன்றாய்

கூரப்பா அரைத்தபின்பு ரெண்டும்நோய்க்
  கூட்டியே ரேகித்து நறுநெய்க்குள்ளே
சேரப்பா வெந்தெடுத்த அடையைத்தின்னு
  தின்றபின்பு நெய்யதனைக் குடித்திடாயே. (௱எ௬)

குடித்திடுநீ யப்படியே அஞ்சுநாள்தான்
  கூறக்கேள் நாளொன்றுக் குளுந்துசேளு
திடத்துடனே படியரைக்கால் மூலிநோய்த்
  தின்றிடவே சொன்னேன்கேள் திறத்தைப்பாரு
வெடிப்பிளந்த காலுக்குச் சிப்பிச்சுன்னம்
  விளக்கெண்ணெ நெய்யுடனே நெல்லிக்காயும்
அடிக்குதியி லரைத்துநீ பூசிப்பாரு
  அப்பனே மண்டலத்திற் கமலமாமே. (௱எஎ)

நாகச்செந்தூரம்.

ஆமடா நாகத்தின் செந்தூரங்சேளு
  அப்பனே தங்கமது பலந்தானென்று
தாமடா குகைதனிலே யுருகும்போது
  தாக்கடா மனேசிலைதான பலமதொன்று
வேமடா வெண்மகொளுஞ்சி வேராலகிண்டு
  மீறவே நீறிப்போம மூலிவேகம்
நாமடா கலவத்திற் கொடடிக்கொண்டு
  ரசத்திலே பலமொன்று வாருவாரே. (௱எஅ)

வாரப்பா கலவத்திற் கூட்டியாட்டு
  மாய்ந்தபின்பு வீரமது பலந்தானென்று
சேரப்பா முலைப்பாலா லாட்டுஆட்டு
  திரமாக மூன்றுநாள் பணியிறம்போடு
நேரப்பா கெந்தகந்தான் ரெட்டிப்பிட்டு
  நேர்மையாய் பொற்றலையின் சாற்றுலாட்டி
போரப்பா வில்லைசெய்து காய்ந்தபின்பு
  பேதமில்லை குக்கிடமாம் புடந்தானுறே. (௱எ௯)

ஆறுன புடத்துக்குப் பொற்றலையின்சாற்றால்
  அரைத்தரைத்துப் புடம்போடு சிவக்குமேபார்
பேறுன நாகஞ் செந்தூரமாச்சு
  பெருமைசொல்ல வென்னாலே முடியாதய்யா
வாறுன கற்பமது கொள்ளும்போது
  வயிற்றிலே யெரிவுகண்டு சிறுநீர்கட்டி
தேறுதே காயந்தான் உலர்ந்துவற்றித்
  தேரைபோலே யிளைத்தால் செய்யக்கேளே. (௱அ௰)

செய்யவே யென்றாக்கால் சொல்லக்கேளு
திரமான நாகத்தின் செந்தூரத்தை
மெய்யாகச் சொல்லுகிறேன் பணவெல்லத்தில்
மெத்தவே கொள்ளாதே குன்றிகொள்ளு
சையோகஞ் செய்யாதே புளியாகாது
தாம்பூல மாகாது சடத்திேனோர்க்கு
பொய்யல்ல மூலத்திலெடுத்த ரோகம்
போகுமடா புலத்தியனே கஞ்சாவாங்கே. (ஈ அக)

கஞ்சாவு மேலமொடு சாதிக்காயுங்
கடுக்காயுஞ் சுக்குடனே வாய்விளங்க
மிஞ்சாம லொடுவடக்கிச் சூரணந்தான்
மிளகோடு திப்பிலியும் நறுக்குமூலம்
மஞ்சளொடு பத்திரியுங் கிராம்புஏமம்
வரிசையாய் குறோசானி சிற்றரத்தைமூலம்
தஞ்சமுற வகையொன்று பலந்தானொன்று
சாதகமா வறுத்துச் சூரணித்துவையே. (ஈ அஉ)

சூரணந்தான் கண்டதுக்குப் பாதியெள்ளு
சுகமாக சீனியது எள்ளிற்பாதி
கூறல்லோ மருந்தெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து
கூர்மையாஞ் சீனியெள்ளுந் துவைத்துக்கொண்டு
வேறேநீ மருந்துகொள்ள வேணுமோசொல்
மீறுகின்ற விம்மருந்து கழஞ்சிகொள்ளே
நீறான நாகத்தின் செந்தூரத்தை
நிலைக்கஒரு மண்டலந்தான் குன்றிஉண்ணே. (ஈ அங)

உண்ணவே மூலமெல்லா மானதாலே
யுதானனென்ற வாய்வாலே குளிர்ந்துபோச்சு
கண்ணவே தச்வாய்வு யெங்கேபோச்சு
கழிச்சல்போ யிரத்தமெல்லா மெங்கேபோச்சு
அண்ணவே கிறாணியெல்லா மகன்றுபோச்சு
வப்பனே பதினெட்டு குஷ்டம்போச்சு
எண்ணவே அனுபான மறிந்துகொண்டால்
எளிதல்ல பாம்பினுட விடந்தான்காணே. (ஈ அச)

விடமேறிக் கொண்டதுபோல் மெய்யிலுள்ள
வியாதியெல்லாம் பாம்புதனைக் கண்டாலோடுந்
திடமாக நாகத்தின் செந்தூரத்தைச்
செப்பிலார் கைமுறையாற் சேரச்சொன்னேன்
வடாராது கருவங்கங் கட்டிக்கொண்டு
வைப்பேசெந்தூர மாத்திரைதான் செய்வாய்

பட்டான வங்கமது சேர்ந்ததானால்
பரியைமுந்திக் கொல்லுமடா பாருபாரே. (௱அரு)

வங்கச்செந்தூரம்.

கொல்லுமே தங்கத்தைக் கொல்லுங்கொல்லும்
கொடிதான சூதமது பலந்தானென்று
செல்லுமே கெந்திர சந்தனக்குப்பாதி
சேரப்பா வெட்டிலொன்று காரங்கூட்டி
வல்லதொரு மிளகுதக்காளிச் சாறூட்டி
வாகாக விருசாம மரைத்துக்கொண்டு
அல்லவே பூநீறு கழஞ்சிகூட்டி
ஆகாகா வங்கமது பலந்தான்ரெண்டே. (௱அசு)

ரெண்டான வங்கமது உருகும்போது
நிசமாகப் பணம்போலே வில்லைதட்டி
திண்டாட வேகொடுக்க விழுங்கும்பாரு
சிறப்பாக மருந்தெல்லாந் தின்றால்வங்கம்
கண்டதுண்டோ கண்ணுள்ளே யிந்தக்கட்டுக்
களங்கமடா வங்கமது உருக்கிப்பாரு
திண்டாடுங் கண்விட்டுக் கருகியுள்ளே
சிரணித்துப் போகாது கவுரிகூட்டே. (௱அஎ)

கூட்டப்பா சூதத்திற் பாதிசேர்த்து
கொட்டப்பா கருவங்கங் கட்டிப்போச்சு
மூட்டப்பா கண்டிடைக்குத் தாளகத்தை
முஸ்திப்பாய் சுத்திசெய் தெடுத்துக்கொண்டு
காட்டப்பா வங்கமது உருகும்போது
கட்டுமால் தேவிதனைப் பொடித்துப்போடு
பூட்டப்பா நாயுருவிக் காம்பால்கிண்டி
புகழான கர்வங்கம் பொலிந்துநீறே. (௱அஅ)

பொலிந்தவங்கங் கலவத்திற் பொடித்துத்தூளாய்
பூகாக மெட்டிலொன்று வுலர்த்திப்போடு
மெலிந்துவிடு வங்கத்திற் பாதிசூதம்
வீரமதில் வங்கத்திற் சமனச்சேரு
மலிந்ததப்பா வாலைரச மூலைப்பாலாட்டி
வாகாக வாட்டியே பனியிற்போடு
நலிந்துவிடும் பின்பதிலே கெந்திதன்னை
ரெட்டிப்புச் சேர்த்துநீ நாட்டிடாயே. (௱அகூ)

நாட்டினால் பொற்றலையின் சாற்றாலாட்டி
நாலாநாள் வில்லைசெய்து ரவியிற்போடு

ஓட்டிலே வைத்திதனை யோடுமூடி
யுறவாகச் சீலைசெய்து காயவைத்து
தாட்டிகமா யஞ்செருவிற் புடத்தைப்போடு
சாதகமா யஞ்சுகிரஞ் சாற்றலாட்டி
மூட்டியே கைமுறையாய் புடத்தைப்போடு
மூதண்ட வங்கமது முருக்கம்பூவே. (௨௱௯௰)

முருக்கப்பூ நிறமென்ன ஒப்போஅல்ல
முக்கியமாம் செந்தூரம் பணவெல்லத்தில்
திருக்கறவே குன்றிகொள்ளு மண்டலந்தான்
திறிகடுகு மதுரமொடு சீரகமுங்கூட்டி
யுருக்கமுடன் பாத்திரத்தில் வைத்துக்கொண்டால்
ஓடுமடா மேகமெல்லா மொழிந்துபோகும்
பெருக்கமுடன் வாயுவெல்லா மெங்கேபோச்சு
பித்தமொடு குட்டமெல்லா மொழிந்துபோசசே. (௨௱௯௧)

போச்சடா கிரந்தியொடு சூலைதாகம்
புணர்ச்சியொடு விந்துவிலே சென்றவாய்வு
போச்சுதடா வுதரத்தி லுள்ளவாய்வு
பொருமலுடன் மேலேப்பம் புழுக்கல்மூலம்
போச்சுதடா சூசிகாவாய்வு குன்மம்
பூரணத்தைக் கொல்லவந்த க்ஷயரோகங்கள்
போச்சுதடா பீனிசங்கள் பாலரோகம்
புத்திகெட்ட சித்தர்களே புகலக்கேளே. (௨௱௯௨)

புகலக்கேள் வங்கமது தங்கமப்பா
பொய்யல்ல கூட்டியதோர் கருவங்கத்தால்
அகிலமெல்லாம் படைத்தளித்த பரத்தின்கூறு
வாகத்திற் குறதிமெத்த வதனாற்சொன்னேன்
பகிரண்டம் பேதிக்குந் தங்கநீறும்
பண்ணுவது வங்கத்தாற் பரிந்துகாணுஞ்
செகமெல்லாங் கொள்ளாது தங்கபற்பம்
செப்பினேன் புலத்தியனே சேர்ந்துகாணே. (௨௱௯௩)

வெள்வங்கச்செந்தூரம்.

காணப்பா தங்கமது பலந்தானென்று
கடியதொரு குகைதனிலே உருகும்போது
தோணப்பா சூதமொடு தாரஞ்சிங்கி
சுத்தித்த வெள்ளீயம் சாதிலிங்கம்
பேணப்பா வரிதாரம் நிமிளைவீரம்
போரான வெண்கார மெட்டுங்கூட்டி

பூணப்பா வகையொன்று பலமுங்கால்தான்
　புகழான பழச்சாற்று லரைத்துக்கட்டே. (௱௬௪)

அரைத்திடுவாய் சாமமொன்று அப்பாகேளு
　ஆகாகா பூநீறு சாரங்கூட்டி
வரைக்கடங்கா நீறாகும் நீவிரைந்து
　மாட்டுவா யிருசாம மரைத்துக்கொண்டு
நிரைக்கவே குன்றியிடை வில்லைகாய்ந்தால்
　நோரக ஒவ்வொன்றாய்க் கொடுக்கவாங்கும்
தரைக்கடங்காத் தங்கமது மருந்தெல்லாமுண்டால்
　சாதகமாய்த் தங்கத்தின் களங்கம்போச்சே. (௱௬௫)

களங்கம்போ யிருக்கின்ற தங்கந்தன்னைக்
　கருவளையல் வீரமொடு காரசாரம்
வழங்கவே பழச்சாற்று லாட்டிக்கூட்டி
　வாகாகச் சோதிச்சுப் பின்புகேளு
விளங்கொண்ட வியமடா தங்கந்தானும்
　வேதையிதில் சொல்வதற்கு நாவெழாது
உளம்பெறவே சூதத்தைச் சரியாயூட்டி
　உத்தமனே வீரத்தை ஒன்றாய்த்தாக்கே. (௱௬௬)

தாக்கடா ரெண்டுபல முலைப்பாலாட்டுச்
　சாதகமாய் பழச்சாறு கூடவாட்டு
வாக்கடா யிருசாம மரைத்தபின்பு
　வரிசையாய் கைமுறையாய் பனியிற்போடு
போக்கடா கெந்தக மிரட்டிப்பிட்டு
　பூட்டடா தாளகந்தா னுலுக்கொன்று
யாக்கடா பத்திலொன்று சிலையுமிட்டு
　அப்பனே பொற்றலையின் சாற்றுலாட்டே. (௱௬௭)

ஆட்டுவா யிருசாமம் வில்லைசெய்து
　வாதித்தன் கண்டபின்புக் குப்பிக்கேற்றி
மூட்டுவாய் மூன்றுநாள் முத்தீயிட்டு
　முழங்கவே வயிரவர்க்குப் பூசைபண்ணி
தீட்டுவா யருணனிறஞ் செந்தூரத்தைச்
　சிறப்பான பூரணசந்திரோ தயந்தான்
நாட்டுவாய் சந்திரோ தயத்தைக்கண்டால்
　நடுங்குமடா நோய்களெல்லாங் கண்காணதே. (௱௬௮)

கண்காண நோயோடு காலன்பாவி
　கடைகெட்ட வாங்கார முள்ளேபுக்கி

விண்காணு விந்துவங்கே மேலேயேறும்
விருதாக மனந்தன்னை யொன்றாய்ப்பண்ணு
மூண்காணு வமுதந்தா னுள்ளேபாயு
மொன்றல்லக் கற்பத்தை யுறுதிபண்ணும்
பெண்ணுகச் சையோகம் பிலத்துதென்றால்
பேசாமல் கொல்லுமடா பிறநீர்க்கோவே. (ளசுகக)

பிறநீரோ வாய்பலொடு மகோதரந்தான்
பெருவயிறு நீர்ச்சோகம் பித்தரோகம்
திரமான வாதத்தி லெழுந்தரோகஞ்
சிலேஷ்பனத்தா லெழுந்ததொரு தோஷந்தோஷம்
வரமான பதினெட்டுச சன்னிமூலம்
ஆகாகா குன்மமொடு பீலிகையுந்தானு
முறவான கிரந்தியொடு மேகஞ்லே
யோனிப்புற் றுட்சிலேக ளொன்றில்லாதே. (உா)

ஒன்றல்ல சதையிலுள்ள தோஷம்போகு
முத்தமனே நாம்பிலுற்ற தோஷம்போகு
மொன றல்ல வபானனின்ற வாயுவாலே
ஒருகோடி நோயுண்டா மொப்பார்சொல்ல
ஒன றல்ல உந்தியின்கீ ழபானனின்று
னுடலையெல்லாங் கெடுப்பதற்கு வுள்ளங்கொண்டா
னென்றல்ல சினம்போக்கிச் சிவம்மாய்ச்செய்தால்
ஓமுடிந்து போமூலத் தபானன்றானே. (உாக)

தானென்ற நோயெல்லா மபானனாலே
சாற்றுவது பிராணனென்ற வாயுவாலே
வானின்ற திசைபத்தும் உதானனாலே
வந்துதடா வெழுவாய்வு மிதிலேபுக்கி
வேனென்ற நோயெல்லாம் படைத்துதப்பா
மெய்விழுந்து போமட்டும் விரோதஞ்செய்யும்
ஏனென்ற பூரண சந்திரோதயத்தை
யெள்ளளவு முட்கொள்ள விடைந்துபோச்சே. (உாஉ)

சுயமாக்கினிகுமாரம்.

போச்சடா சீனியிலே நெய்தான்கூட்டிப்
புகழான திரிகடுகு சீரகமுங்கூட்டிப்
போச்சென்ற நோய்களெல்லாஞ் சோத்தானே
புக்குமடா கானமெங்கே கடலகளெங்கே
போசசடா கற்பத்தால் வந்ததோஷம்
போகுதடா பூரணத்தைத் தின்றதாலே

போச்சப்பா கற்பங்க ளெல்லாம்பாரு
  பூண்டதொரு சுயமக்கினி குமாரன்போக்கே. (உ௱க)

குமாரனென்ன வேசுறுக்குக் கொள்கிறேன்கேள்
  குற்றமெல்லாந் தீர்த்திருந்த வயத்தினியுஞ்
சமானமதாய்க் காந்தத்தி னியந்தானுஞ்
  சரியாக வகையொன்று பலந்தானென்று
வமராடு தாளகந்தான் பலத்திற்பாதி
  யப்பனே கெந்தகம் பலந்தான்ரெண்டு
எமராய சூதமறைப் பலமுங்கூட்டி
  எலுமிச்சம் பழச்சாற்றால் சாமமாட்டே. (உ௱௨)

ஆட்டுவாய் சுற்றாழஞ் சாறுசாமம்
  அப்பனே ரசிதகிண்ணத்தில் வைத்து
மூட்டுவாய் ரவிமுகத்தில் திங்களொன்று
  முடிந்தகுருக் கழஞ்சியதில் வீரம்போட்டு
மாட்டுவா யென்சொல்வே னரைக்கும்போதில்
  மகத்தான ரவிமுகத்தி லெல்லாம்நீறும்
சூட்டுவாய் கெற்பநோய் சூலமேகந்
  தொடுகுறிபோற் றுன்மத்தைத் தூரத்தும்பாரே. (உ௱௫)

தூரத்துமடா அக்கினிகுமா ரனபாஞ்சு
  சொல்லின்வாய் முந்துமுன்பே சுழற்றிவெட்டு
மாத்தினிலே யிரும்புபட வைத்தாப்போலே
  யறுத்துவிடு மகாராச புத்திரந்தான்
சிரத்தினிலே வாய்வேது செலந்தானேது
  தேகத்தில் தசைகளுட வலிதானேது
சுரத்தினிலே மீறுமுறை சுரங்களேது
  துடிக்குமொரு விழிநோய்கள் தொண்ணூற்றாறே. (உ௱௬)

ஆறுவகைக் கிறுணியெல்லா மகன்றுபோகு
  மப்பனே மகோதரத்தை யறுத்துவாங்குங்
கூறுகின்ற குறைநோவு குஷ்டமெல்லாங்
  குடிப்போறு மென்றுசொல்லிக் குமாரனோடே
வேறுமொழி பேசாமல் விரைந்தங்கோடும்
  வெட்டவெளி நோய்களெல்லாம் விழலாய்ப்போகுந்
தேறுமிந்தக் குமாரவர்க்க மார்க்குமில்லை
  செப்பினே னிதுவறிந்து தெளிந்திடாயே. (உ௱௭)

ஆனந்த வயிரவன்.

தெளிந்திடவே யானந்த வயிரவன்தான்
  செப்பரிது செப்புகிறேன் புலத்தியனேஅய்யா

களிந்ததொரு பசுத்தழையின் பாலில்சொல்லிக்
கவுரிலிங்கஞ் சிலைதாரம் காரநாபி
வழிந்தகெந்தி வீரமொடு சிங்கிதோட்டி
வகையொன்று பலமொன்று மண்டலந்தான்
குளிர்ந்தகுழிப் பெண்ணமுரி கற்றுழம்பால்
கொட்டியரை யெண்சாமம் ரவியிற்போடே. (உ௱அ)

போடப்பா வில்லைசெய்து காய்ந்தபின்பு
புடமொன்று பத்தெருவில் மணற்குள்போடு,
நீடப்பா நீறியது இடைபோகாது
நேறுகின்ற துத்தமொரு பலத்தைகூட்டு
சூடப்பா சூடமொரு பலந்தானென்று
சூட்டியபின் குருக்கழஞ்சி தூக்கிப்போடு
ஆடப்பா விதினுட்டு மகாரசண்ணி
யானந்த வயிரவனும் பொன்னூமத்தே. (உ௱கூ)

மத்தினுட சாற்றாலே சாமமொன்று
வாகாக மிளகுபோல் உண்டைசெய்து
பெற்றதொரு சாம்பிருணிப் புகையிற்காட்டிப்
பெருமையொத்த வெள்ளியுட சிமிழ்க்குள்வைப்பாய்
சத்தியுட சாபத்தை நிவிர்த்திசெய்து
சாதகமாய் வயிரவனைப் பூசைபண்ணி
முத்திபெறுங் குளிகையெல்லாம் முன்பின்பாராய்
மூலையென்ற சன்னியெல்லா முறிந்துபோமே. (உ௱ய)

முறிந்துபோங் குன்மமொடு குட்டம்மூலம்
மூலத்திற் கிராணியொடு வானந்தவாயும்
முறிந்துவிடு மானந்த வயிரவனைக்கண்டால்
மோசமடா வென்றுசொல்லி நோய்களெல்லா
முறிந்துபோம் செந்தூர விதங்கட்கெல்லா
மூப்பூவின் குருவினுட மூர்க்கமப்பா
முறிந்துபோம் ரசபற்பங் கண்டாலப்பா
மோகமாய்ச் சூதபற்பஞ் சொல்லுறேனே. (உ௰க)

சூதபற்பம்.

சொல்லுகிறேன் வெண்முள்ளிப் பழத்தின்சாறு
தோனறுகண்டங கத்திரியின் பழத்தின்சாறு
வெல்லுகிறே னீர்முள்ளி காவெள்ளுள்ளி
விளங்கவே குறட்டையுட பழத்தின்சாறு
மல்லுகிறேன் படியொன்று வகையொன்றப்பா
வஞ்சுபத்துப் பலங்கெந்திக் கலவத்தாட்டு

சொல்லுகிறே னென்றுசொல்லுங் கெந்தியைத்தான்
குருவிதிலே கழஞ்சியஞ்சு கூட்டியாட்டே. (உ௰உ)

ஆட்டவே சாறெல்லாம் வற்றவற்ற
ஆச்சரியக் காசுபோல் வில்லைசெய்து
மூட்டுவாய் ரவிமுகத்தி லுலர்ந்தபின்பு
முறையோடே கைமுறையாய்த் தயிலம்வாங்கு
நாட்டுவாய் சூதமொரு பலந்தானியம்
நலமாகக் கலவத்தில் வாருவாரு
கூட்டுவாய் கெந்தியுட தயிலமப்பா
குறையாமற் பலமொன்று கூடவாறே. (உ௰௩)

வாரப்பா குட்டித்தக் காளிச்சாறு
வகையாகப் படியொன்று மாளமாளச்
சேரப்பா தயிலமொடு சூதந்தானுஞ்
சேர்த்தரைக்க மூன்றுநாள மாண்டுபோகுங்
கூரப்பா குகையிலிட்டுச் சில்லுச்செய்து
குக்கிட்த்தில் நீறியது கொடுஞ்சூதந்தான்
பேரப்பா யிதுக்குப்பேர் ரசகற்பூரம்
பெரிதான கிரந்தியெல்லாம் பிறிந்துபோமே. (உ௰௪)

போமடா வாயுவென்ற தெல்லாங்கேளு
புற்றரை யாப்போடுகடி தடத்தின்புற்று
வாமடா லிங்கப்புற்றுச் சூலைமேக
வளவற்ற நோய்களெல்லா மகலுமப்பா
நாமடா புடஞ்சயமாய் ரசகற்பூரம்
நாட்டினே மிதுவன்றிப் பதங்கஞ்செய்வார்
தாமடா கொண்டாக்கால வாயைக்கட்டுந்
தந்தம்போம் பொறுத்தெல்லாஞ் சாருங்காணே. (உ௰௫)

வயிரபற்பம்,

காணப்பா கட்டுபல மிணங்கன்தேனில்
கைகொண்டு மத்திச்சு வயிரத்துக்குத்
தோணப்பா கவசமிட்டுப் புடத்தில்நீறுஞ்
சுகமாக உட்பூசு குருவையப்பா
வீணப்பா வல்லவிது வயிரபற்பம்
மீறவே சமனாகச் சூதங்கூட்டி
பூணப்பா சூதத்திற் பாதிவீரம்
புழுக்கந்த மிடைப்பாதம் வண்டுகூட்டே. (உ௰௬)

வண்டரிசி சூதத்திற் பாதிகூட்டி
வளமான விந்துவினல் மாட்டியாட்டு

ரெண்டுநா ளரைத்தபின்பு வில்லைகட்டி
நேராக உலர்ந்தபின்பு புடத்திற்போடு
கண்டவரார் வயிரத்தைப் பற்பமாகக்
கடினமடா வயிரமது பற்பஞ்செய்ய
பண்டையிலே யிதனாலே பரியைநீற்றிப்
பரிசனத்தில் வீரமிட்டு வேதைபாரே. (உ௰எ)

வேதையாந் தங்கபற்பந் தேனில்குன்றி
வீதமடா மண்டலங்கொள் க்ஷயமெல்லாம்போம்
பாதையாம் வச்சிரத்தால் தங்கநீற்றிப்
பாசமாய்க் கொண்டுவந்த மார்க்கமப்பா
பேதையாந் தேகமெல்லாம் பொன்போலாகும்
பிள்ளைகட்குச் செய்திட்டால் பிலத்தகாயந்
தாதையே யமவறுத்துத் தட்டிப்போகுந்
சகலசித்துங் கைவசமாஞ் சார்ந்துபாரே. (உ௰அ)

பாரப்பா வயிரபற்பம் பணவெல்லத்திற்
பாங்காக விருநேர மண்டலந்தான்
சாரப்பா தேகமது வயிரம்போலாந்
தசைமேலே வெடித்தபுண்கள் புளவையோடு
தீரப்பா பவுத்திரமூதற் கண்டமாலை
தீராத கடிவிஷங்கள் குஷ்டரோகம்
போரப்பா வயிரமொன்று கேட்குமுன்பே
பிறிந்து பாராமலே பிறிந்துபோமே. (உ௰கூ)

பிறிந்துபோங் கர்ப்பத்தால் வந்ததோஷம்
பிழைபொருக்குமோ வயிரங்கண்ணுற் பார்த்தால்
முறிந்தபோ மலக்கட்டு கட்டித்தானல்
மோசமடா மலக்கட்டுத் தீரசொல்வேன்
செறிந்தந்தத் திரிகடுகு ரோகணியிந்துப்பு
திறிபலை முத்தக்காசு விடையமோமம்
அறிந்துவாய் விளங்கமொடு நறுக்குமூலம்
அப்பனே வகையொன்று பலந்தானென்றே. (உஉ௰)

ஒன்றப்பா நிலவாகை சூரணந்தான்
உத்தமனே யரைப்படிதா னுணர்ந்துசெய்து
நன்றப்பா மருந்துடனே யெல்லாந்தூளாய்
நாட்டினூற் கண்டிடைக்குச் சிவதைகூட்டிச்
சென்றப்பா யோண்டத் தயிலத்தோடே
திரமாக லேகியம்போற் செய்துகொண்டு
வென்றப்பா வெருகடிதான் சீனிவாயில்
விழுங்குவா யினிப்போடே விழுங்குவாயே. (உஉக)

விழுங்குவாய் லேகியந்தான் கழஞ்சிரெண்டு
  மீறுகின்ற சீதமெல்லா மறுத்துண்டேபோம்
ஒழுங்கான வேப்பீர்க்குக் கிஷாயத்திற்கொள்
  உத்தமனே கிருமியெல்லா மொழிந்துபோகும்
நழுங்காத குடல்வாயு மாண்டுபோகும்
  நலமான வபானவாய்க் கடுப்புத்தோன்று
எழுங்காமல் சுத்தியுண்டாம் கிர்த்தோஷம்போம்
  இதைப்போலே சுகபேதி யில்லைகாணே. (உஉஉ)

காணப்பா கெந்தகமும் லிங்கம்வீரங்
  கட்டாகக் குருவோடு காரசாரம்
பூணப்பா சிலைநாகங் கருநாகவங்கம்
  புகழான வெள்ளையொடு சூதந்தாரந்
தோணப்பா தாரசிங்கி யயத்திேனுடு
  துரிசிபொன் னிமிளையொடு துத்தஞ்சூடன்
வேணப்பா வகையொன்று பலந்தானெனுன்று
  வெண்கருவி லெருக்கம்பால் நீர்விட்டாடே. (உஉக)

ஆட்டுவாய் மூச்சாம மப்பாகேளு
  மையனே முலைப்பால் சாமமோன்று.
நாட்டுவாய் பழச்சாறு சாமம்நாலு
  நல்லதொரு பொற்றலையின் சாற்றினுலே
மூட்டுவா யிருசாம மரைத்தபின்பு
  முனையான வில்லைசெய்து ரவியிற்போடு
நீட்டுவா யுலர்ந்தபின்பு குகையில்வைத்து
  நிசமாக மேல்மூடிப் புடத்தைச்செய்யே. (உஉச)

செய்யடா புலஸ்தியனே யீசானத்திற்
  செப்பமாய் வயிரவர்க்குப் பூசைபண்ணு
செய்யடா மணம்மறைவில் முப்பதெருவாலே
  திடமாகப் புடம்போடு மயில்கழுத்தாம்வண்ணஞ்
செய்யடா குசமனைகங் கெந்திகூட்டித்
  தீர்க்கமுடன் பொற்றலையின் சாற்றூட்டி
செய்யடா குக்குடமாய் முன்போற்போட்டுத்
  திடமாகுஞ் செய்செந்தூரந் தான்காணே. (உஉரு)

செந்தூர மாகுமடா பொற்றலையின்சாற்றால்
  திரும்பியொரு போதரைத்தது புடத்தைப்போடு
செந்தூரங் கருஞ்சிவப்பா மப்பாகேளு
  தேனேடு செந்தூரங் குன்றிகொள்ளு
செந்தூர மயிர்தசக் கரையிற்கொண்டால்
  தேகத்தில் வெட்டைசுரஞ் சோப்போகுஞ்

செந்தூர மண்டலமே தின்றுயானல்
  சிரதோஷஞ் சலதோஷங் கபாலவாய்வே. (௨௨௬)
வாயுவினல் வந்ததொரு மேகசூலே
  வலிகுன்மங் காமாலே சோகைபாண்டு
நேயமுட னுந்திக்குள் சுரமும்போகும்
  நெஞ்சுவலி தண்டெரிவு பிறநீர்க்கண்டு
யாயுமே நாதவிந்து விழுங்கும்வாய்வு
  அப்பனே புழுவெட்டு விழியில்ரோகம்
சாயுமே நோய்களெல்லா மிருபிடங்களற்றுத்
  தவறுண்டு போகுமடா சகலநோவே. (௨௨௭)
சகலமாம் நோயெல்லாந் தீர்ந்துபோகுஞ்
  சாற்றுகிறேன் புலஸ்தியனே தப்பாதையா
சுகமான கெந்தியது பலந்தானென்று
  சுட்டதிலே யயப்பொடிதான் பலந்தானென்று
புகலாதே பழச்சாற்று லரைத்துச்சாமம்
  பூட்டியரை வெள்ளெருக்கம் பாலினலே
வகையாக விருசாம மாட்டிவில்லே
  வளமாக ரவிமுகத்தி லுலர்த்திடாயே. (௨௨௮)
உலர்ந்தபின்பு முப்பதெருப் புடத்தைப்போடு
  உத்தமனே யனுபானங் கண்டுகொள்ளு
அலர்ந்ததொரு நோயெல்லாம் பின்வாங்கிப்போகும்
  அப்பனே காந்தமது பலந்தானென்று
பலன்பெறவே கெந்தியது பலந்தானென்று
  பாங்கான பழச்சாற்று லாறுசாமங்
கலந்தாட்டு வெருக்கம்பால் ரெண்டுசாமங்
  கட்டுவில்லேத் தான்காய்ந்தால் புடத்தைப்போடே. (௨௨௯)

மண்டூரச்செந்தூரம்.

போடுவாய் முப்பதெருக் குள்ளேநீதான்
  பொலிவான செந்தூர மனுபானத்தில்
தேடுநீ கொள்ளப்பா ரோகமெல்லாந்தீருந்
  திரமான மண்டூரேங் கேளுகேளு
வாடுவா யாயிரந்தான் வருஷம்சென்ற
  வற்றதொரு மண்டூரம் பலந்தானென்று
கூடுவாய் கெந்தியது பலந்தானென்று
  கொட்டுவாய் சூதமொடு கெவுரிதானே. (௨௩௦)
தானென்ற சீனமொடு தாளகந்தானென்று
  சாரமொடு வெடியுப்புச் சாரங்கூட்டிக்
கானென்ற வெருக்கம்பா லதனலாட்டிக்
  கலவத்தில் சாமமொன்று பழச்சாற்றுலே

வேனென்ற சாமம்ரெண் டாட்டிவில்லே
விளங்கவே காய்ந்தபின்பு புடத்திற்போடு
கோனென்ற குக்குடந்த சமாசமயமுன்போல்
குறிப்புடனே யரைத்தரைத்துப் புடத்திற்போடே. (உகக)
புடந்த சந்தானனபின்பு மண்ரோந்தான்
பிலத்ததொரு செந்தூர மாகும்பாரு
திடம்படவே யனுபான மறிந்துசெய்தால்
தேகத்திற் பாண்டுவெல்லாந் தீர்ந்துபோகும்
நடம்புரிந்த லிங்கமனே சிலையுங்கல்னர்
ராசவர்த்தங் கெவுரிமிரு தாரசிங்கி
விடம்புரிந்த வெள்ளையொடு தாளகந்தான்
மீரவே வகையொன்று பலந்தானென்றே. (உகஉ)

நவலோகசெந்தூரம்.

பலமான தெல்லாந்தான் சமனாய்ச்சூதம்
பாங்கான வைங்கோல நெய்விட்டாட்டி
பிலமாக விருசாம மரைத்துக்கொண்டு
பிசகாம விரவியக்கினி பதங்கமேற்றக்
குலமான நவலோக மெல்லாஞ்சாகுங்
கூறவே பதங்கமது பலந்தானென்று
நலமாக மூசையிலே யுருக்கும்போது
நல்லவெள்ளிப் பலமொன்று உருக்கித்திரே. (உகங)
உருகியதோர் வெள்ளியது கலவத்திட்டு
உத்தமனே ரெண்டுபலம் வீரங்கூட்டி
பெருக்கவே முலைப்பாலா லாட்டுஆட்டு
பேசாமல் மூன்றுநாள் பனியிற்போடு
கருவான கெந்தகந்தான் பலம்நாலிட்டு
கட்டான பொற்றலையின் சாற்றாலாட்டு
உருவான குப்பியிலே வாலுகேந்திரம்
ஓகோகோ துடியான செந்தூரந்தானே. (உகச)
தானென்ற வெங்கலந்தா னிந்தவிதம்
சாற்றடா செந்தூரந் தானேயாகுங்
கானென்ற நாகமொடு நவலோகந்தான்
கருநாகம் பித்தளைதாம் பிரத்தினேடு
ஏனென்ற வேம்மொடு நவலோகந்தான்
என்னசொல்வேன் முன்போலே யிடைதப்பாமல்
வானென்ற செந்தூரம் வெவ்வேறேயாகு
மளவற்ற நோய்களெல்லா மகன்றுபோமே. (உகரு)
போமப்பா நவலோக செந்தூரங்கண்டாற்
பொறியான கன்மாந்திர நோய்களெல்லாம்

ஆமப்பா மண்டூரம் போலேயல்லா
வப்பனே நவலோக செந்தூரஞ்செய்
யேமப்பா கைமுறைகள் தப்பாமல்செய்
எடுத்ததொரு செந்தூர மெல்லாமாகும்
நாமப்பா நவரத்தின மிந்தவிதம்
நாட்டினு லொன்பதுஞ்செந் தூரந்தானே. (உ௧௬)

ராஜபூபதி,

தானென்ற சர்வமகா வீரசூர
சங்கார ராஜபூ பதியைக்கேளு
ஏனென்று பூபதிப்பேர் கேட்குமுன்னே
யெமதூதாள் காதவழிக்கப்பால் செல்வார்
வானென்ற நவலோக செந்தூரந்தான்
வகையான நவரத்தின செந்தூரந்தான்
ஏனென்ற வகையொன்று பலமொன்றுக்கு
இடைகள் தவறுதபடி தூக்குதூக்கே. (உ௧௭)
தூக்கப்பா பலமொன்று சூதபற்பம்
துரிசிசெந் தூரமது பலந்தானென்று
வாக்கப்பா மண்டூரம் பலந்தானென்று
வாகான காந்தமது பலந்தானென்று
நோக்கப்பா கெந்திபற்பம் பலந்தானென்று
நோவதனைத் தீர்க்கின்ற தாம்பிரந்தான்
தாக்கப்பா திரிகடுகு பலமொன்றுமஞ்
சாதிக்காய் வாய்விளங்கங் கிரும்புகூட்டே. (உ௧௮)
கூட்டுவாய் அதிவிடையம் நறுக்கு மூலங்
குங்குமப்பூ கஸ்தூரி வீரம்பூரம
நாட்டுவாய் கோரோசனை சிவதைசூடன்
ராசவர்த்த மஞ்சனக்கல் பின்கடுக்காய்
சூட்டுவாய் தாணிக்காய் நெறிவிடம்பாஷாணந்
துத்தமொடு கருநாபி கெவுரிலிங்கம்
மாட்டுவாய் வகையொன்று பலங்கால்வித
மைந்தனே மருந்தெல்லாங் கல்வஞ்சேரே. (உ௧௯)
சேரவே ஒனுருக்கி யரைக்கச்சொல்வேன்
செம்முள்ளித் தோடைவளை சரியான்கொன்றை
யாரையொடு வல்லாரை வெண்கொளுஞ்சி
யாவாரை முருக்கம்பூச் செம்பரத்தம்பூப்
பாரமெனுங் கற்றுழும் பழத்தின்சாறு
பாங்கான பொற்றலையின் பொன்னூமத்தை
வாரமுடன் வகையொன்றால் நாளொன்றாக
வணங்கவே யரைத்திடுவாய் சாற்றினாலே. (உ௨0)

சாற்றிலே யரைத்துச்சிறு பயறுமட்டாய்த்
தவருமல் உண்டைசெய்து ரவியிற்போடு
கூற்றுவனூர் தேசம்விட்டு தேசம்போவார்
கூருன பூபதிதான் காயக்கண்டு
தேற்றுவார் மானிடர்கள் தேசத்துள்ளே
தேகமினிப் பிலத்துதென்பார் திடங்கொண்டேதான்
மாற்றினல் வியாதியெல்லாஞ் சித்தாப்பா
மகத்தான பூபதியை வணங்கிச்செய்யே. (உசக)

நாகபற்பம்.

வணங்கியே புலஸ்தியனே அய்யாகேளு
வளமான நாகபற்ப மாகச்சொல்வேன்
இணங்காத நாகமது பலந்தானென்று
இந்திடைக்குச் சிலையிட்டுக் கொளுஞ்சிவேரால்
குணங்காமற் கிண்டிவாப் பற்பமாகுங்
கூறக்கேள் பின்னெடுத்துக் கலவத்திட்டு
மணம்பெறவே பழச்சாறரு ஞலுசாம
மடங்கவே யரைக்கையிலே மருந்துபோடே. (உசஉ)
மருந்தென்ன வீரமொரு பலத்தைப்போடு
வாகான லிங்கமொரு பலந்தான்போடு
பொருந்தவே சூதமரைப் பலந்தான்வாரு
புகழாக வில்லைசெய்து ரவியிற்போடு
திருந்தவே யஞ்செருவிற் புடத்தைப்போடு
திரமான நாகமது செந்தூரந்தான்
அருந்தவே குன்றியிடை பனைவெல்லத்தி
லப்பனே குன்மமெல்லா மகன்றுபோமே. (உசங)
போமடா சிதாஞர் கெந்திரெண்டு
புகழாக வகையொன்று பலந்தானென்று
ஆமடா பழச்சாற்று ஞலுசாம
மப்பனே மறுகல்வக் தன்னிற்கேளு
வேமடா வயப்பொடியுஞ் சூதஞ்சாரம்
வெவ்வேறு பலமொன்று விளங்கவேதா
ஞமடா ஞலிலொன்று சாமமாட்டு
நன்றிகல்வத் திட்டமருந் தொன்ருய்ச்சேரே. (உசச)
ஒன்ருக்கிப் பொற்றலையின் சாற்ருலாட்டு
உத்தமனே யறுசாம மரைத்தபின்பு
நன்ருனபத்தெருவிற் புடத்தைப்போடு
ரசகெந்தி சாரமாவிடை போகாது
சென்ருடு செந்தூர மென்னசொல்வேன்
சிராகக் குன்றியிடை தேனிற்கொள்ளு

குன்றுத குன்மமெட்டு பீலிகையினோடு
  கொழுத்த மகோதரந் தீருங்கூறினேனே. (உ௪ரு)
கூறினேன் சலாசத்துச் செந்தூரத்தைக்
  குன்றியிதில் தேனோடே கூட்டிக்கொள்ள
கூறினே னீராம்பல் சோகைதாகங்
  கொண்டசலக் கழிச்சலொடு விளைரோகங்
கூறினே னீர்க்கடுப்புக் கல்லடைப்பு
  கொத்தமல்லி சீரகத்திற் கொண்டாற்கேளு
கூறினேன் பித்தங்கள் நாற்பதுமேதீருங்
  கொள்பிறநீர்க் கோவைகுட்டம் பதினெட்டோடே.(உ௪சு)
பதினெட்டு குட்டமொடு குறைநோயெல்லாம்
  பறக்குமடா செந்தூர மூச்சுப்பட்டாற்
கெதிகெட்டோ மென்றோடும் வாதமெல்லாங்
  கெஞ்சவே தானடிக்கு நறுக்குமூலம்
மதிகெட்டே னென்னுதே புலஸ்தியனேஅய்யா
  வாய்விளங்கந் திரிகடுகு வோமங்காயம்
அதிவிடைய மெவாச்சாரம் பனைவெல்லந்தா
  னப்பனே வகையொன்று பலந்தானென்றே. (உ௪எ)
பலமோடு சாரணைவேர் மருந்தோடெல்லாம்
  பரிவாகச் சூரணித்துப பாகுகேளு
கலங்கவே திருமேனி சிறுபுட்கானுங்
  கரியானும் வெவ்வேறே யுலர்த்தித்தூளாய்
மலங்காமல் சூரணித்துப் படிகாலப்பா
  மருந்தோடே சேகரித்து நறுந்தேன்விட்டே
இலங்கவே யொருபோது கழஞ்சியுண்ண
  வேகுமடா சிலேஷ்பனங்க ளொண்ணூற்றுறே (உ௪அ)
தொண்ணூற்று முஞ்சடலத் தத்துவந்தான்
  சித்தியாந் தோஷமெல்லாஞ் சொக்கியோடுங்
கண்ணூற்ற நாடியெல்லாம் பிலக்குஞ்சொன்னேன்
  கைகண்ட பூநீறு கருவாய்ச்செய்தால்
எண்ணமாய்ச் செந்தூர மினத்துக்கெல்லா
  மிடுவதொரு பலத்துக்குக் கழஞ்சிவீத
மிண்ணவே செந்தூரம் பண்ணினுக்கா
  லுறுதியா மில்லாவிட்டா லுலகம்பொய்யே. (உ௪௯)
பொய்யென்று வுலகந்தான் வேதாந்தத்தைப்
  பூட்டாமற் சித்தாந்தம் புக்கிக்கெட்டாற்
பொய்யென்பான் கருவறியான் செந்தூரஞ்செய்யப்
  போக்கறியா னுலகத்தா னிடைபோச்சென்பான்
பொய்யென்பா னவன்வாயில் மண்ணையள்ளிப்
  போடுநீ பாப்பாசி கொண்டுசென்னு

